4 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண்: எம். 8798.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 10 | மதுரை | 16-12-72 | சனி | சுடர் 295

## குஜராத் என். ஜி. ஓ.க்கள் வேலைநிறுத்தம் விரிவடைகிறது

அகமதாபாத். டிச. 15—

குஜராத் மாநில அரசு ஊழியர்கள் போராட்டத்தில் மேலும் பல பிரிவு ஊழியர்கள் கலந்து கொண்டனர்.

ஊதிய உயர்வு முதலிய கோரிக்கைகளுக்காக கடந்த 7-ந் தேதி முதல் இந்த வேலைநிறுத்தம் தொடர்ந்து நடக்கிறது. இந்த வேலை நிறுத்தத்தில் கடந்த 13-ந்தேதி முதல் அரசுத் தலைமைச் செயலக குமஸ்தாக்களும், சட்டசபை அலுவலக 3-ம், 4-ம் பிரிவு ஊழியர்களும் கலந்து கொண்டனர்.

இதனுல் அரசு அலுவலங்கள் ஸ்தம்பித்துள்ளனர். வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டுள்ள ஊழியர்களது தலைவர்களை, பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் காங்கிரஸ் அரசு கைது செய்து வருகின்றது.

## அமைச்சர்களுக்கு எதிராக ஆர்ப்பாட்டம்

மசூலிப்பட்டினம், டிச. 15—

இங்கு கடந்த 13-ந் தேதி நடந்த ஒரு காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் இரு அமைச்சர்களைப் பேச விடாது முல்கி விதி எதிர்ப்பாளர்கள் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

இம்மாதம் 17-ந் தேதி விஜயவாடாவில் நடக்கும் எம். பி. க்கள் மற்றும் தலைவர்களடங்கிய கூட்டத்தில் தங்களது எதிர்காலத் திட்டம் உருவாக்கப்படும் என்றுஅமைச்சர்கள் கூறினர். இருந்தும் ஆர்ப்பாட்டம் ஓயவில்லை. எனவே கூட்டம் பாதியிலேயே முடிந்தது.




# மிகப்பெரும் ஆயுதக் கிடங்கு சாம்பலாயிற்று

## சைகோனில் விடுதலைப் படையின் வீர சாகசம்

சைகோன், டிச. 15 —

தென்வியட்நாமில் அமெரிக்காவின் பெரும் ஆயுதக் கிடங்கு ஒன்றை விடுதலைப் படையைச் சேர்ந்த இரு வீரர்கள் தாக்கி நாசப்படுத்தினர். இத் தாக்குதலால் சைகோன் நகரமே அதிர்ந்தது.

தென் வியட்நாமின் தலைநகரான சைகோனுக்கு கிழக்கே 30 கி. மீ. தொலைவிலுள்ள கேட்லாய் என்னுமிடத்தில் இருந்த மிகப் பெரும் ஆயுதக் கிடங்கு தாக்குதலுக்கு இலக்கானது.

பெரிய ரப்பர் தோட்டத்துக்கு மத்தியில் அமைக்கப்பட்டு இருந்த ஆயுதக்கிடங்கில் மிகப்பெருமளவில்வெடி குண்டுகளும், அக்கினிக் குண்டுகளும்சிறுதுப்பாக்கி ரவைகளும் அமெரிக்க ஆக்கிரமிப்புப் படைகளும், தென்வியட்நாம் கூலிப்படைகளும் பாதுகாத்து வைத்திருந்தன.

இந்த ஆயுதக் கிடங்கை அழித்து ஒழிக்கவேண்டுமென்று விடுதலைப் படை முடிவு செய்தது. அதன்படி, விடுதலைப் படையைச் சேர்ந்த இரு வீரர்கள் தங்களது இடுப்பில் வெடிகுண்டுகளைக் கட்டிக்கொண்டு நள்ளிரவில் காவலாளிகளுக்கும் தெரியாமல் அந்த ஆயுதக் கிடங்குக்குள் நுழைந்து அதனைத்தகர்த்தனர்.

அந்த ஆயுதக் கிடங்கில் தொடர்ச்சியாக வெடிகுண்டுகள் வெடித்ததில் சைகோன் நகரமே அதிர்ந்தது. நகரில் வீடுகளிலுள்ளஜன்னல்கள், கதவுகள் எல்லாம் அதிர்ந்தன.

### அணைக்க முடியாது

முதன் முதலாக வெடி ஏற்பட்ட 8 மணி நேரத்திற்குப் பின்னும் பல நூற்றுக் கணக்கான டன் எடையுள்ள வெடி குண்டுகளும், சிறு துப்பாக்கிக் குண்டுகளும்ாகண்டு களும் வெடித்து பெரும் கொளுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தன.

சிறு சிறு குண்டுகள் வெடித்ததில் நகரில் இருந்த வீடுகள், கடைகள் ஹோட்டல்களின் ஜன்னல்களும், கதவுகளும் தாக்கப்பட்டன.

இத்தீயைக் கட்டுப்படுத்த முடியாது என்றும் அது தானாகவே எரிந்து ஓய வேண்டியது தான் என்றும் தென் வியட்நாம் தான்-துய்-ஹா என்ற ஒரு ஆயுத டெப்போவுக்கு அருகில் ஒரு பதுங்கு குழியில் ஒளிந்திருந்த தென்

(3-ம் பக்கம் பார்க்க)

(8-ம் பக்கம் தொடர்ச்சி)

வியட்நாம்கூலிப்படையைச் சேர்ந்த அதிகாரி ஒருவர் கூறினர்.

"வெடி வெடிக்கையில் ஏற்பட்ட சத்தத்தால் வாரிச்சுருட்டி பதறிப் போய் எழுந்து ஜன்னல் வழியே மாடிகளிலிருந்தும் பார்த்தோம். அது வாண வேடிக்கை பார்த்ததுபோல் இருந்த என்ருர்.

இத் தாக்குதலால், அந்த ஆயுதக் கிடங்கு முழுவதும் சாம்பலாயிற்று. சேதம் எவ்வளவு என்பது குறித்து இப்போது ஒன்றும் சொல்வதற்கில்லை என்று மற்ருெரு அதிகாரி கூறினர்.

பாதுகாவலர்களையும் ஏமாற்றிவிட்டு வெடிக்கிடங்குக்குள்ளே சென்று இத்தகைய தாக்குதல் நடத்திய அந்த இரு விடுதலை வீரர்கள் உள்ளே இருப்பது, வெடிகுண்டு வெடிக்கும் வெளிச்சத்தில் தெரிந்ததாக அதிகாரிகள் கூறினர்.

## பீகார் அரசு ஊழியர் வேலைநிறுத்தம் தொடருகிறது

பாட்னா, டிச. 15—

பீகார் மாநில அரசு ஊழியர்களின் வேலைநிறுத்தம் இன்று 8-வது நாளாக தொடர்ந்து நடந்து வருகிறது.

அரசு ஊழியர்கள் அணுவும் உறுதியுடனும்கட்டுப்பாடுடனும், கோரிக்கைகள் நிறைவேறும் வரை தொடர்ந்து நடத்த முடிவு கொண்டுள்ளனர்.

வேலைநிறுத்தத்தில் எல்லாத் தரப்பு ஊழியர்களும் ஈடுபட்டுள்ளதால் அரசு அலுவலகங்கள், நீதி மன்றங்கள், கலெக்டர் அலுவலகங்கள் உட்பட எதுவும் செயல்படவில்லை.

### கேரள நிலப் போராட்டம்

## அகற்றப்பட்ட இடங்களில் அதிக குடிசைகள் முளைக்கின்றன

கோழிக்கோடு, டிச, 16—

இண்டிகேட் - வலதுகம்யூனிஸ்ட் அரசுப் போலீசின அடக்குமுறைகளையெல்லாம் — "தூ..." வென துச்சமாய்க்கருதி பல்லாயிரக்கணக்கான — நிலமற்ற ஏழை விவசாயிகளும், விவசாயத் தொழிலாளர்களும் தங்களது உபரிநிலமீட்புப் போராட்டத்தைதொடர்ந்து நடத்திக்கொண்டு வருகின்றனர்.

குடிசைகளைப் போலீஸ் பிய்த்து எறிந்துவிட்ட இடங்களிலெல்லாம் முன்பு இருந்ததைவிட மேலும் அதிக அளவில் குடிசைகள்கட்டப்படுகின்றன.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, கர்ஷகத் தொழிலாளர் கட்சி, கேரள சோசலிஸ்ட் கட்சி—ஆகிய கட்சிகளின் போராட்டக்குழு தலைமையில், நவம்பர் 15-ம தேதி நிலமீட்புப் போராட்டம் ஆரம்பிக்கப்பட்டு, இன்றுடன் 32 நாட்கள் ஆகின்றன.

### ஒரே நாளில் 100 புதிய குடிசைகள்

10-ம் தேதி யன்று மாநிலம் முழுவதும் நிலச்சுவான் தாருக்குச் சொந்தமான உபரி நிலங்களிலும், அரசு நிலங்களிலும் புதிதாக 100 குடிசைகள் கட்டப்பட்டன. 40 பேர் கைது செய்யப்பட்டனர்.

கண்ணனூர் மாவட்டத்தில், சீமேனி உபரி நிலத்தில் தோழர் கண்ணன் நாயர் தலைமையில் 21 தொண்டர்கள் 10ம்தேதி யன்று குடிசைகள் கட்டினர்.

குடிசைகள் கட்டிய தொண்டர்களை மீண்டும் போலீசார் கைது செய்தனர்.

ஒற்றப்பாலம் தாலுகா கடம்பழிபுரம் பஞ்சாயததில் இரண்டு உபரி நிலங்களில் குடிசைகள் கட்டப்பட்டன.

போத்துண்டியில் பூங்கோட்டு அரசுக் காட்டு நிலத்தில் நிலமற்ற 8 பேர் சேர்ந்து 6 குடிசைகள் கட்டினர். ஏழும்பிலாச்சேரி கமாரனுண்ணி நாயர் என்பவருடைய 100 ஏக்கர் உபரி நிலத்தில் 8 குடிசைகள் கட்டபபட்டன.

காரூர்மனக்கலில் உள்ள உபரி நிலங்களில் — ஒவ்வொன்றிலும் 2 குடிசைகள் கட்டப்பட்டன.

ஸ்ரீகிருஷ்ணபுரம் பஞ்சாயத்தில் ஒரு நிலச்சுவான் தாருக்குச் சொந்தமாக பத்தலங்காட்டு மலையில் உள்ள உபரி நிலத்தில் நிலமீட்பு போர் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. இங்கு குடிசைகள் கட்டிய அனைவரும் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்படடனர்.

### குழந்தைகள் கைது

ஆலப்புழை மாவட்டத்தில் வலியகாவு, நூறநாடு ஆகிய உபரி நிலங்களில் பிரவேசித்து 7 குடிசைகள் கட்டிய 7 பெண்களும் 5 குழந்தைகளும் உளபட 26 பேரை 12-ந் தேதியன்று போலீசார் கைது செய்தனர்.

12-ந் தேதி, நூறநாடு பறையன்குளம் உபரி நிலத்தில் நிலமற்ற விவசாயத் தொழிலாளர்கள் 9 குடிசைகள் கட்டி, விவசாய வேலைகளையும் துவக்கினர்.

குடிசைகளிலிருந்த 8 ஆண்களையும், 7 பெண்களையும். 5 குழந்தைகளையும் போலீசார் கைது செய்தனர். 11-ம் தேதி, இங்கு கட்டப்பட்ட 5 குடிசைகளை போலீசார் பிய்த்தெறிந்தனர். 5 போராட்டத் தொண்டர்களையும் கைது செய்தனர்.

### போலீஸ் வெறிச்செயல்

12-ந் தேதி திருவனந்தபுரத்தில் ஒரு புறம்போக்கு நிலததில குடிசைகள் கட்டிய நிலமற்ற ஏழைகளை— எவ்விதக் குற்றமும செய்யாத அப்பாவிகளை—போலீசார் கைதுசெய்து கடுமையாகத தாக்கினர்.

கைது செய்யப்பட்டு தாக்கப்பட்டஅப்பாவிஏழைகளின் கூட்டத்தில் குழந்தைகளும் பெண்களும் இருந்தனர்.

இவர்கள் கோர்ட்டில் ஆஜராக்கப்பட்டு, 10 நாள் சிறை தண்டனைக்கும் உட்படுத்தப்பட்டனர்.

பாலக்காடு மாவட்டத்தில் பொறறச்சேரியில ஆலிக்குட்டி ஹாஜி என்ற நிலச்சுவான்தாருடைய 150 ஏக்கர் உபரி நிலத்தில் 10-ம் தேதியன்று நிலமற்ற 8 பேர் பிரவேசித்து 8 குடிசைகள் கட்டினர். இங்கு போலீசார் வந்து 8 குடிசைகளை நாசமாக்கிவிட்டு, 8 பேரையும கைது செய்தனர்.

பெரும்பாவூரில், எர்ணுகுளம் மாவட்ட விவசாயிகள் சங்க சம்மேளனம் நடைபெற்றதையொட்டி, 10-ம் தேதியன்று, பல்லாயிரக்கணக்கான விவசாயிகள் கலந்துகொண்ட பிரம்மாண்டமான ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடைபெற்றது. இதில் ஏராளமான பெண்களும் வயோதிகரும் குழந்தைகளும் கலந்துகொண்டனர்.

## திருத்தம்

### ப. தொ. சங்க பிரதிநிதிகள் கூட்ட இடம்

தோழர்களே ,

மாநில ரீதியான பஞ்சாலைத் தொழிற்சங்கங்களின் பிரதிநிதிகள் கூட்டம் இம்மாதம் 18, 19 தேதிகளில் (திங்கள், செவ்வாய்) திருச்சி டவுனில் மெயின் கார்டு கேட் பக்கமுள்ள முனிசிபல் சத்திரத்தில் நடைபெறும் ; முன்பு அறிவித்திருந்தது போல் முனிசிபல் டிராவலர்ஸ் பங்களாவில் அல்ல.

தோழமையுள்ள,

ஏ. நல்லசிவன்,
உதவிச் செயலாளர்,
சி. ஐ. டி. யூ.,
தமிழ் மாநிலக் குழு.

மதுரை,
14—12—72.

### டிசம்பர் 18 முதல் 24 வரை

# கோரிக்கை வாரமாக கொண்டாடுக

## தோட்டத் தொழிலாளர்களுக்கு வேண்டுகோள்

தோழர்களே,

நவம்பர் 17 முதல் 19 முடிய மேற்கு வங்கத்தில் உள்ள டார்ஜிலிங்கில் கூடிய அனைத்திந்திய தோட்டத் தொழிலாளர் மாநாடு சில பொதுக் கோரிக்கைகளை உருவாக்கியுள்ளது. அவற்றில முக்கியமானவற்றை கீழே தருகிறேம்.

1. தோட்டத்தின் விஸ்தீரணம் எவ்வளவு இருந்த போதிலும், எல்லாத் தொழிலாளர்களுக்கும் தேவையை அடிப்படையாகக்கொண்ட குறைந்தபட்ச மாதச் சம்பளமாக ரூபாய்300- தர வேண்டும்.

2. விலைவாசி உயர்வை நூற்றுக்கு நூறுசதம் ஈடுகட்டும் முறையில், வாழ்க்கைச் செலவுப் புள்ளியுடன் இணைந்த பஞ்சப்படி உயர்வு வேண்டும். 3 தோட்டத் தொழிலாளர் சட்டத்தை தீவிரமாக அமல் நடத்துவது; சட்டத்தின் சாரத்துக்களை மீறும் முதலாளிகளுக்கு கடும் தண்டனை விதிப்பது.

4. ஆண் பெண் தொழிலாளர்களுக்கு சம சம்பளம் தரவேண்டும்.

5 வெளி நாட்டவருக்குச் சொந்தமான எல்லாத் தோட்டங்களையும்,தோட்டப் பொருள்களில் நடைபெறும் அன்னிய வியாபாரத்தையும் நஷ்டஈடு இன்றி தேசியமயமாக்கவேண்டும். இந்தியப் பெரு முதலாளிகளுக்குச் சொந்தமான தோட்டங்களையும் தேசியமயமாக்கவேண்டும்.

6. எல்லாத் தொழிலாளர்களையும் நிரந்தரமாக்க வேண்டும். கேஷீவல்,காண்டிராக்ட், தோட்டங்களில் குடியிருக்காதவர் ஆகிய அனைத்துத் தொழிலாளர்களையும் நிரந்தரமாக்க வேண்டும்.

மேலேகண்ட கோரிக்கைகளை தொழிலாளர்களுக்கு விளக்கிச் சொல்லும் முறையில், டிசம்பர் 18—24 வாரத்தில் ஒரு நாளை கோரிக்கை தினமாகக் கொண்டாடுமாறு தேசமெங்கும் உள்ள தோட்டத்தொழிலாளர்களுக்கு மாநாடு அறைகூவல் விடுத்துள்ளது.

எனவே தமிழகத்திலுள்ள தோட்டத் தொழிலாளர் சங்கங்கள் இந்த வாரத்தில் ஊர்வல ஆர்ப்பாட்டங்களையும் பொதுக்கூட்டங்களையும் நடத்தி கோரிக்கைவிளக்கப் பிரச்சாரத்தை வெற்றிகரமாக நடத்தும்படி வேண்டுகிறேன்.

தோழமையுள்ள,

ஆர். உமாநாத்
செயலாளர்
சி. ஐ. டி. யூ.
தமிழ்மாநிலக் குழு.

## திரிபுரா சட்டமன்றத்தின் முன் 30 ஆயிரம் பேர் ஆர்ப்பாட்டம்

அகர்தலா, டிச. 14—

திரிபுரா மாநிலத்தின் தலைநகரான அகர்தலாவில் மலைவாழ் மக்களும், தொழிலாளர்களும் மற்றும் மார்க்சிஸ்ட் கட்சி ஊழியர்களும் பிரும்மாண்டமான ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தினர்.

இதுவரை திரிபுராமாநிலமே கண்டிராத அளவுக்கு மிகப்பெரும் ஊர்வலமாக அந்த ஊர்வலம் இருந்தது. சின்னஞ்சிறிய மலைநாடான திரிபுரா மாநிலத்தில் நடந்த இந்த ஆர்ப்பாட்ட அணிவகுப்பில் 30 ஆயிரத்திற்கும் அதிகமானேர் கலந்துகொண்டனர். பிரும்மாண்டமான இந்த ஆர்ப்பாட்ட அணி வகுப்பிற்கு மார்க்சிஸ்ட் கட்சி அறைகூவல் விடுத்திருந்தது.

### கைக்குழந்தைகளுடன் பெண்கள்

திரிபுரா மாநிலத்தை பஞ்சப் பிரதேசமாக அறிவித்து, உடனே தீவிரமாக நிவாரண வேலைகளில் ஈடுபட வேண்டும். மற்றும் விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்தவேண்டும். மாநில முழுவதும் மலிவு விலையில் தானியங்களை விநியோகிக்க வேண்டும். இதுபோன்ற 10 அம்சக் கோரிக்கைகளை வலியுறுததி இந்த மாபெரும் ஆர்ப்பாட்டம் நடைபெற்றது.

இதில் குறிப்பிடத்தக்கது என்ன வென்ருல் இந்த ஆர்ப்பாட்டத்தில் ஏராளமான மலைவாழ் பெண்கள் கலந்துகொண்டது தான். அவர்கள் கைக்குழந்தைகளுடன் ஆர்ப்பரித்து வந்த காட்சி மிகவும் எழுச்சியூட்டுவதாக அமைந்திருந்தது.

உரிமை முழக்கமிட்டு பல்லாயிரக்கணக்கான மக்கள் அணிதிரண்டு வந்த அணிவகுப்பு அகர்தலா நகரின் முக்கிய வீதிகளின் வழியாக சட்டமன்றத்தையடைந்தது.

### நிருபன் சக்ரவர்த்தி

சட்டமன்றத்தையடைந்ததும் ஆர்ப்பாட்டத்தினர் கோஷங்களை முழக்கினர்.

பின்னர் திரிபுரா சட்டமன்றத்தின் எதிர்கட்சித் தலைவரும், மார்க்சிஸ்ட் கட்சித் தலைவருமான தோழர் நிருபன் சக்ரவர்த்தியின் தலைமையில் தூதுக்குழு ஒன்று அமைச்சர்களைச் சந்தித்துகோரிக்கைகள் அடங்கிய மகஜரைக் கொடுத்தது.

## குற்றச்சாட்டுகளும் பதிலும்

சென்னை, டிச. 15—

முதலமைச்சர் கருணாநிதி தன் அமைச்சரவை மீது அ. தி. மு. க., வலது கம்யூனிஸ்ட் தலைவர்களால் கூறப்பட்ட குற்றச் சாட்டுகளையும் அதற்கு அரசின் பதில்களையும் நேற்று சட்டசபையில் வைத்தார்.

இவற்றை சட்டசபையில் வைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது. ஆகவே இதற்கு சம்பிரதாயப்படி பிரதம மந்திரியின் ஒப்புதல் வேண்டுமென்று கேட்டதாயும், அதற்கு பிரதம மந்திரியிடமிருந்து எந்தப் பதிலும் வரவில்லை என்றும், எனினும் இங்குள்ள நிலைமையில் இவைகளை சட்டசபை முன்வைக்க வேண்டிய அவசியத்தால் தான் இந்த முடிவுஎடுத்ததாயும் முதலமைச்சர் தெரிவித்தார். இவற்றின் பிரதிகளை நேற்று பிரதம மந்திரிக்கு அனுப்பி வைத்ததாகவும கூறினர்.

இந்தக் குற்றச்சாட்டுகளைப்பற்றி விசாரணை செய்ய மத்திய அரசு ஒரு விசாரணைக்கமிஷன் நியமிப்பதற்கு உரிமை உண்டாஎன்பது சந்தேகத்திற்குறியதே என்றும் திரு. கருணாநிதி தெரிவிததார்.

இக்குற்றச்சாட்டுகள் அல்லாமல் வேறு குற்றச்சாட்டுகள் இருந்தாலும் எதிர் கட்சிகள் முன்வைக்கலாமென்றும், அதற்கு பதில் சொல்ல அரசு தயாராக இருப்பதாகவும் அறிவித்தார்.

## 3 லட்சம் என். ஜி. ஓ. வினர் வேலைநிறுத்தம்

### தலைமைச் செயலகம் முன்பு பீகாரில் "தர்ணு" தொடருகிறது

பாட்ணு, டிச. 13—

பீகார் மாநிலத்திலுள்ள 3 லட்சம் என். ஜி. ஓ. வினர் தங்களுடைய 12 அம்சக் கோரிக்கைகளை வலியுறுத்தி காலவரம்பற்ற வேலைநிறுத்தம் செய்துவருகின்றனர்.

அரசு தலைமைச் செயலகத்தின் புதிய கட்டிடம் முன்பு 25 என். ஜி. ஓ.வினர் இன்று 'தர்ணு' போராட்டம் நடத்தினர். போராட்டத்தின் ஆருவது நாள் அமைதியாக நடந்தது என போலீஸ் வட்டாரம் கூறுகிறது.

# தீக்கதிர்

## தேசபக்தி எங்கே? தன்மானம் எங்கே?

சமீபத்தில் இந்திய அரசு தரப்பிலிருந்து எடுக்கப்பட்டு வரும் நடவடிக்கைகள், அமெரிக்காவுடன் அது விதிக்கும் பல்வேறு நிபந்தனைகளுக்கு உட்படும் வகையில் இந்திய அரசு மீண்டும் தொடர்புகொள்ள முயற்சி செய்வதையே காட்டுகின்றன.

இந்தியாவில் அமெரிக்க உளவிலாகாவின் வேலை தீவிரமாகி வருகிறது என்று அண்மையில் பிரதம மந்திரியும், காங்கிரஸ் தலைவர்களும் பேசிய பேச்சுக்களுக்கு முற்றிலும் மாறாக—சமீபத்தில் நாடாளுமன்றத்தில் சி. ஐ. ஏ. பற்றிய விவாதம் வந்தபோது—அரசாங்க தரப்பிலிருந்து பேசிய பேச்சுக்களும், இதற்கு முன்பு சுவரண் சிங் அன்னிய விவகாரம் பற்றிப் பேசிய பேச்சும், வெளி விவகார இலாகாவின் புதிய செயலாளர் திரு. கேவால் சிங் அமெரிக்காவிற்குச் சென்று, அங்கு "மூடு மந்திர" பேச்சு வார்த்தைகளை நடத்திவிட்டுத் திரும்பி வந்ததும் இந்திய அரசின் "புதிய பார்வை"யினை எடுத்துக்காட்டுகின்றன.

இந்திய அரசு பயங்கரமானதொரு சறுக்கல் பாதையில் அடியெடுத்து வைத்துவிட்டதற்கு இவை அபாயகரமான உதாரணங்களாகும்.

நாடாளுமன்றத்தில் பேசுகையில், அன்னிய விவகார அமைச்சர் திரு. சுவரண்சிங் கீழ்வருமாறு குறிப்பிட்டார்.

"இந்தியாவும் பாகிஸ்தானும் பரஸ்பரம் பேசித் தம் பிரச்சினைகளைத் தீர்த்துக்கொள்ளும் ஒரு கொள்கைக்கு அமெரிக்கா ஊக்கமளிக்கும் என்று நாம் நம்புவதற்கு எல்லா சமிக்ஞைகளும் உள்ளன.

"இந்தப் பின்னணியில், அமெரிக்காவுடன் மீண்டும் இந்தியா தன்னுடைய உறவை முறைப்படுத்திக் கொள்ளுவதற்கு எல்லா நடவடிக்கைகளையும் மேற்கொள்ளும்" என்று அறிவித்தார்.

இந்தப் பேச்சு பேசிய 24 மணி நேரத்திற்குள்ளாகவே, அமெரிக்க ஏகாதிபத்திய ஆட்சியின் வெளிவிவகார அமைச்சர் ரோஜர்ஸ் தயாரிக்கப்பட்ட அறிக்கையொன்றை வாஷிங்டனில் செய்தியாளர்களிடையே வாசித்தார்.

அதில் "பரஸ்பரம் ஒருவரை யொருவர் புரிந்து கொள்ளும் வகையிலும்—பரஸ்பரம் லாபம் தரும் வகையிலும் பயன் தரத்தக்க உறவுகளை அமெரிக்காவும், இந்தியாவும் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்" என்று அறிவித்தார்.

இதனுடைய முழு அர்த்தம் என்ன என்பது இந்திய நாடாளுமன்றத்தில அண்மையில் சி. ஐ. ஏ. பற்றி விவாதம் நடத்த போது தெரிய வந்தது.

இந்தியாவிலுள்ள அமெரிக்க உளவிலகாவின் பல்வேறு ஸ்தாபனங்களை மூடிவிட வேண்டும்; இந்தியா அமெரிக்காவிற்குக் கொடுக்க வேண்டிய உணவுக் கடன் பணத்தை இங்குள்ள அமெரிக்கத் தூதரகம் வாங்கி கோடிக் கணக்கில் இந்திய அரசிற்குக் கணக்குக் காட்டாமல் செலவழித்துக் கொண்டிருப்பதை தடுக்க வேண்டும் என்று எழுந்த கோரிக்கைகளை இந்திய அரசின் தரப்பில் ஏற்க மறுத்ததின் காரணம் இப்போது நாட்டு மக்களுக்கு தெளிவாகும் என்று நம்புகிறோம்.

இதுமட்டுமல்ல; அண்மையில் இந்திய உணவிலாகாவின் காரியதரிசி அமெரிக்காவிற்கு ரகசியமாக விஜயம் செய்தார். 3 லட்சம டன் அமெரிக்க உணவு தானியத்தை வாங்கியுள்ளார். இதை பகிரங்க மார்க்கெட்டில் வாங்கியதாக அறிவிக்கிறார். நம் நாட்டின் நிலப் பிரபுக்களிடமிருந்து கொள்முதல் செய்ய விருப்பமில்லாத ஆட்சி மீண்டும் அமெரிக்காவிடம் உணவுக்காகச் சரணடையும் நிகழ்ச்சி இது.

இதே சமயத்தில் இந்திய நாட்டிலுள்ள முதலாளித்துவ ஏடுகள் அனைத்தும், பங்களா தேச விடுதலைப் போர் காலத்தில் அமெரிக்காவை கடுமையாக விமர்சனம் செய்ததை திடீரென்று மாற்றிக்கொண்டு அமெரிக்கப் புகழ்ச்சியில் இறங்கியுள்ளன. அமெரிக்க உறவின் அவசியம் பற்றி பகிரங்கமாக எழுதத் தொடங்கிவிட்டன.

இந்தியாவின் ஆளும் வர்க்கங்களின் கட்சிகளுக்கு குறிப்பாக காங்கிரஸ் கட்சிக்கு தேசிய தன்மான உணர்ச்சியோ, நாட்டின் சுதந்திர உரிமைகளை பாதுகாக்கும் தேசபக்த உணர்வோ இல்லை என்பதற்கு இந்த நிகழ்ச்சிகளெல்லாம் எடுத்துக்காட்டுகளாகும். தேசபக்தியைவிட முதலாளிவர்க்கத்தினரின் உடனடி "நலன்கள்" புனிதமானவை என்று அவை கருதுகின்றன.

பங்களாதேசத்தை படுகொலை செய்யத் தூண்டிய ஏகாதிபத்தியக் கயவர்கள், 7-வது கப்பற் படையை வங்காளக் கடலில் கொண்டுவந்து நிறுத்தி— இந்தியாவின் சுதந்திரத்தையே அச்சுறுத்திய ஏகாதிபத்திய கொலைகாரர்கள், இன்று— 10 மாதங்கள்கூட ஆகவில்லை— ஆப்த நண்பர்களாக இந்திய முதலாளி வர்க்கத்தினருக்கு காட்சியளிக்கிறார்கள்.

இந்தப் பயங்கர மாறுதல்— சறுக்கல் இந்திய நாட்டின் நலனுக்குத் துரோகம் விளைவிக்கும் வீழ்ச்சிப்பாதை என்று எச்சரிக்கிறோம்.

தேசபக்தியும், தன்மானமும் உள்ள ஒவ்வொரு இந்தியனும், இன்றைய சர்வதேசக் கொலைகாரர்களுடன், கொலைகாரர்களுடன், ஆக்கிரமிப்பாளர்களுடன் கைகோர்த்துச் செல்லக்கூடாதென்று தன்னுடைய ஆவேசம் மிகுந்த குரலை எழுப்பவேண்டுமென்று வலியுறுத்துகிறோம்.

## மேற்கு வங்க அரசு ஊழியர் ஆர்ப்பாட்டம்

கல்கத்தா, டிச. 14— மேற்கு வங்க அரசு ஊழியர்கள் டிசம்பர் 11-ம் தேதி கல்கத்தாவில் பெரும் ஆர்ப்பாட்டம் நடத்தினர். இந்த ஆர்ப்பாட்டத்தில் பல்லாயிரக்கணக்கான அரசு ஊழியர்கள் கலந்து கொண்டனர்.

இந்த ஆர்ப்பாட்டத்திற்கு மேற்கு வங்க அரசு ஊழியர் இணைப்புக்குழு அறைகூவல் விடுத்திருந்தது.

குறைந்த பட்ச போனஸ் 8.33 சத வீதம் வேண்டும். வாழ்க்கைக்குத் தேவையான போதுமான சம்பளம், பஞ்சப்படி அளிக்க வேண்டும். மேலும் அரசு ஊழியர்களின் ஓய்வு பெறும் வயதைக் குறைப்பதை எதிர்த்தும்தான் இந்த மாபெரும் ஆர்ப்பாட்டம் நடைபெற்றது.

கிழக்குக் கல்கத்தாவிலுள்ள எஸ்பிளனேட்டில் மிகப் பிரமாண்டமான ஆர்ப்பாட்டம் நடைபெற்றது.

# தென்வியட்னாம் சிறையில் 3லட்சம்வியட்னாம்மக்கள்

## சித்திரவதைகள் கொடுமைகள்

### இந்துஸ்தான் டைம்ஸ் தரும் விபரம்

ஹாங்காங், டிச. 12 –

**தென்வியட்னாமில் அமெரிக்க ஏகாதிபத்திய வெறியர்களாலும், தியூவின் பொம்மை அரசாங்கத்தாலும் சிறைப்பிடித்து வைக்கப்பட்டுள்ள லட்சக்கணக்கான கைதிகள் படும் இன்னல்களை வார்த்தைகளால் வருணிக்க முடியாது.**

**உலகப் புகழ் பெற்ற படுகேவலமான 'புலிக் கூண்டு'ச்சிறைகளிலே லட்சக்கணக்கான வியட்னாம் மக்கள் அடைத்து வைக்கப்பட்டு சொல்லொணா இன்னல்களுக்கு ஆளாக்கப்பட்டு வருகிறார்கள். இந்தச் சிறைகளைப்பற்றியும், இதில் வாடும் கைதிகளின் நிலையைப் பற்றியும் 'இந்துஸ்தான்டைம்ஸ்' என்ற ஆங்கில நாளேட்டின் ஹாங்காங் செய்தியாளர் எழுதியுள்ள சிறப்புக் கட்டுரையின் சுருக்கம் வருமாறு:—**

மனிதத் தன்மையற்ற காட்டுமிராண்டித் தனமான கொடுமைகள் நிறைந்தவை தான் இந்த புலிக்கூண்டுச் சிறைகள்.

மிகவும் குறுகலான காற்று - வெளிச்சத்தையே காணமுடியாத இச்சிறைகளில் அப்பாவி வியட்னாம் மக்கள் அடைத்து வைக்கப்பட்டு அணு, அணுவாகச் சித்திரவதை செய்யப்படுகின்றனர்.

### 20 அடி அறைக்குள் 150 பேர்

உதாரணமாக 20 அடி நீளம்- 20 அடி அகலமுள்ள ஒரு சிறிய அறையில் 150க்கும் மேற்பட்ட கைதிகளை அடைத்து வைத்துள்ளனர்.

இன்னும் படுமோசமான நிலை என்னவென்றால் இந்தச் சிறைக் கைதிகளுக்கு தனியாக கக்கூஸ் வசதி கூட கிடையாது. இந்த 20 அடி அறைக்குள்ளேயே தான் அவர்கள் சிறுநீர், மலம் கழிக்க வேண்டும். இதனால் இந்த அறைகள் அசுத்தத்தின் உறைவிடமாக மாறிவிட்டன.

இன்னும் கொடுமை என்னவென்றால் இந்தச் சிறைகளில் வாடும் ஒரு கைதிக்கு நாளொன்றுக்கு அரை லிட்டர் தண்ணீர் (ஒரு தம்ளர்) தான் தரப்படுகிறது. இந்த அரை லிட்டர் தண்ணீருக்குள் அவர்கள் தங்களது தாகத்தைத் தீர்த்துக் கொள்ளவும் வேண்டும் உடம்பையும் சுத்தம் செய்து கொள்ளவேண்டும். நினைத்துப் பார்க்கவே மிகப் பயங்கரமாக உள்ளது.

இந்த ஒரு தம்ளர் தண்ணீருக்குள் அவர்கள் எப்படி தங்களின் வாழ்க்கையை ஓட்டுகிறார்களோ!

### சிறைச்சாலைகளல்ல நோய் உற்பத்திசாலைகள்

தென் வியட்னாமின் கியாதின் மாநிலத்திலுள்ள கக்டக் பகுதியில் இது போன்ற பெரிய சிறைகள் உள்ளன. இதனால்தான் இந்தச் சிறைகள் பன்றிக் குடிசைகள் என்றும், குதிரைக் கொட்டடிகள் என்றும் அழைக்கப்படுகின்றன.

சிறைக்கூடங்கள் என்று சொல்லப்படும் இந்த நரகக் கூட்டங்கள் நோய்களின் உறைவிடங்களாகத் திகழுகின்றன. வாதநோய், பெரி பெரி, காசநோய், வயிற்றுக்கடுப்பு, பைத்திய வெறி இதுபோன்ற நோய்களெல்லாம் இந்தச் சிறைக் கொட்டடிகளில் சர்வசாதாரணம்.

இதுபோன்ற சித்திரவதைக் கூடங்கள் தென் வியட்னாமில் ஆயிரத்திற்கும் அதிகமாக உள்ளன. இந்தச் சிறைக் கொட்டடிகளில் - பன்றிக் குடிசைகளில் 3 லட்சம் வியட்நாம் மக்கள் அடைத்து வைக்கப்பட்டு சித்திரவதை செய்யப்படுகின்றனர்.

### வேட்டை நாய்களை ஏவிவிடுகின்றனர்

மேலும் சிறைக்கூடங்களில் மிருகங்களை விட படுமோசமான நிலையில் அடைத்து வைக்கப்பட்டுள்ள இவர்களை நடத்தும் முறையோ இதைவிட மிகக் கொடுமையாக உள்ளது.

இந்தக்கைதிகளை தென் வியட்னாமில் உண்டாகல சிறைத்தண்டனை பெற்ற புழுப்பெற்ற கொலைக்காரர்களை விட்டு பராமரிக்கச் செய்கின்றனர்.

இந்தக் கொலைகாரர்கள் சிறைக்கைதிகளை படுத்தும் கொடுமைகளுக்கு அளவே இல்லை. சவுக்கடிகள், அடி, உதை, மிதி இவைகள் எல்லாம் சர்வ சாதாரணம்.

இதனால் சிறையில் உள்ள கைதிகளுக்கும், இக் கொலை காரர்களுக்கும் ஏதாவது சிறுபூசல் ஏற்பட்டுவிட்டாலோ கேட்கவே வேண்டாம். உடனே அப்பாவி கைதிகளின் மீது வேட்டைநாய்களை- கூட்டம் கூட்டமாக ஏவிவிட்டு கடித்து குதறச்செய்கின்றனர். துப்பாக்கிசூடு நடத்துவதெல்லாம் மிகமிகச் சாதாரணம்.

### வெடிகுண்டு வீச்சுகள்

இதைவிட மிகக் கொடூரமான நிகழ்ச்சி என்னவென்றால்- சிறு பூசல் ஏற்பட்டாலும் கூண்டுகளுக்குள் அடைக்கப்பட்டுள்ள கைதிகளின் மீது ஏகாதிபத்திய வெறியர்கள் சக்திவாய்நத கைக் குண்டுகளை வீசி விடுகின்றனர்.

வெடி குண்டுகள் வெடித்து அந்த அறையிலுள்ள கைதிகளின் சதைகள் உறுப்புகள் எல்லாம் பிய்ந்து சிதறடிக்கப்பட்டு கோரமாக படுகொலை செய்யப்படுகின்றனர். இந்தப் படுகொலைகள், சித்திரவதைகள் தொடர்ந்து நடந்துகொண்டே இருக்கின்றன.

### கிராமம் கிராமமாக கைது

இந்தச் சிறைக் கைதிகளில் பெரும்பாலோர் அமெரிக்க ஏகாதிபத்திய வெறியர்களின் கிராம அமைதிப்படுத்தும் திட்டம், 'போனிக்ஸ்' என்ற திட்டங்களின் கீழ் கூலிப்படையினரால் கைது செய்யப்பட்டவர்கள்.

இந்தத் திட்டங்களின கீழ் அமெரிக்க ஏகாதிபத்திய வெறியர்களாலும், கூலிப்படையினராலும் கிராமம், கிராமமாக அப்பாவி மக்கள் சுற்றி வளைக்கப்பட்டு கைது செய்யப்பட்டனர். இந்தச் சிறைக் கைதிகளில் கம்யூனிஸ்ட்கள், கொரில்லாப் படை வீரர்கள் மிகக் குறைவானவர்களே.

இவர்களில் அதிகம்பேர் விடுதலை வீரர்களுக்கு ஆதரவு தந்தனர்-அல்லது விடுதலை வீரர்களின் அனுதாபிகள் என்ற பெயரில் கைது செய்யப்பட்டவர்கள் தாம். பல சமயங்களில் விடுதலை வீரர்களுக்கு உதவி செய்தார்கள் என்ற பெயரில் ஒரு கிராமத்திலுள்ள அனைவருமே சுற்றிவளைக்கப்பட்டு கைது செய்யப்பட்டுள்ளனர்.

### கம்யூனிஸ்டுகள் ஆக்கப்பட்டனர்

இந்தச் சிறைகளில் அடைக்கப்பட்ட லட்சக் கணக்கான சாதாரண கிராம மக்கள் ஏகாதிபத்திய வெறியாகளால் சித்திரவதை செய்யப்பட்டு நரக வேதனைகளுக்கு ஆட்படுத்தப்பட்ட பின்னர், அவர்கள் உண்மையிலேயே சிறந்த கம்யூனிஸ்டுகளாக ஆக்கப்பட்டுவிட்டனர் என்று ஒரு ஆராய்ச்சி கூறுகிறது.

எனவே பாரிஸ் அமைதிப் பேச்சுவார்த்தையில் ஏதாவதொரு ஒப்பந்தம் ஏற்பட்டு புலிக் கூண்டுகளில் அடைபட்டுள்ள லட்சக்கணக்கான இக்கைதிகள் படுகொலை செய்யப்படாமல் விடுதலை செய்யப்பட்டால் தென் வியட்னாமின் புதிய நிர்மாணத்தில் இவர்கள் பெரும் பங்கு வகிப்பார்கள் என்று 'இந்துஸ்தான் டைம்ஸ்' நிருபர் எழுதியுள்ளார்.

# டெல்லி பல்கலைக் கழகத்தில் போலீஸ் வெறியாட்டம்

## நேரில் காண மற்ற பல்கலை கழக மாணவர்களுக்கு அழைப்பு

புதுடெல்லி, டிச. 15— டெல்லியிலுள்ள டெல்லி பல்கலைக் கழகத்திற்குள் புகுந்து மாணவர்களை போலீசார் வெறித்தனமாக தாக்கியுள்ளனர். இதனால் ஏராளமானவர்கள்படுகாயமடைந்தனர்.

இந்நிகழ்ச்சியைத் தொடர்ந்து டெல்லிப் பல்கலைக்கழகம் மூடப்பட்டுள்ளது. இந்த நிலையைப்பற்றி விவாதித்தடெல்லிபல்கலைக் கழக மாணவர்கள், இந்தியாவிலுள்ள மற்ற பல்கலைக் கழக மாணவர்களையும், டெல்லியில் நடந்த நிகழ்ச்சிகளை நேரில் கண்டறிந்துகொள்ள வருமாறு அழைப்பு அனுப்ப முடிவு செய்துள்ளனர்.

### சத்தியாக்கிரகம்

இதன் பின்னர் மாணவர் ஊர்வலம் டெல்லி பல்கலைக் கழக துணைவேந்தர் அலுவலகத்திற்கும், பின் அவரது வீட்டிற்கும் சென்றது. தங்களது கோரிக்கைகளை வலியுறுத்தி துணைவேந்தர் வீட்டின் முன்பு இரவெல்லாம் தொடர்ந்து கோஷமிடப்போகிறோம் என்று மாணவர் தலைவர் ஒருவர் அறிவித்தார்.

போலீஸ் வெறியாட்டத்தைக் கண்டித்து துணை வேந்தர் அலுவலகம் முன நாள்முழுவதும் உட்கார்ந்து சத்தியாக்கிரகம்செய்தனா.

டெல்லி பல்கலைக் கழக மாணவர் பிரச்சனைக்கு விரைவில் தீர்வுகாண வலியுறுத்தி மாணவர் பிரதிநிதிகள் கோஷ்டி விரைவில் மத்திய கல்வியமைச்சர் நூருல் ஹாசனையும், பிரதமரையும் சந்திக்க முடிவு செய்துள்ளது.

# சிறையில் தாக்குதலை எதிர்த்து உண்ணாவிரதம்

திருச்சூர், டிச. 13— கேரளத்தில் நில மீட்புப் போராட்டத்தின் போது கைது செய்யப்பட்டு, இரிங்காலக்குட் சப்—ஜெயிலில் அடைக்கப்பட்டுள்ள தோழர் ராமச்சந்திரனை 9-ந்தேதியன்று ஜெயில் வார்டர் மிருகத்தனமாகத் தாக்கினாராம்.

வார்டரின் இந்தக் கொடிய செயலைக் கண்டனம் செய்தும், அவர் மீது தக்க நடவடிக்கை மேற்கொள்ள வேண்டுமெனக் கோரியும், அன்று இரவு சிறையில் உள்ள எல்லா விவசாயிகளும் உண்ணாவிரதம் இருந்தனர்.

## கருணாகரனின் போலீஸ் ஏமாந்த கதை லாக்-அப்பிலிருந்து

# திருடன் தப்பி ஓட்டம்

வண்டிப்பெரியார், டிச. 14— பல இடங்களில் களவு செய்து பிடிபட்ட ஜோர்ஜ் (வயது 19) என்ற நபரை வண்டிப்பெரியார் போலீஸ் கைது செய்து லாக்-அப்பில் இட்டிருந்தார்கள்.

இரவு ஆனதும் போலீசாரின் கவனக் குறைவின் காரணமாக வளியில் மேஜைமீதிருந்த சாவியை ஒரு பிரம்பால் எடுத்து பூட்டைத் திறந்து லாக-அப்பிலிருந்து தப்பி ஓடிவிட்டான், ஓடியவன் அங்கிருந்த ஒரு டார்ச்லைட்டையும் துப்பாக்கியையும் கொண்டு போனதாக பொதுமக்கள் பேசிக்கொள்கிறார்கள். ஜோர்ஜை வலைவீசித்தேடிக் கொண்டிருக்கிறார்கள்.

நாட்டில் (மார்க்ஸிஸ்ட்) கம்யூனிஸ்ட் கட்சியின் நல்ல காரியத்தைத் தடுக்க துப்பாக்கியெடுக்கும் கருணாகரனின் போலீஸ், 18 வயதுகாரனிடம்துப்பாக்கியையும் கொடுத்து விட்டு ஏமாந்த கதை வேடிக்கையாக இருக்கிறது.

## ஆசிரியருக்கு...

# உரம் கிடைக்குமா?

ஐயா.

குமரி மாவட்டத்தில் இரசாயன உரம் கிடைப்பது குதிரைக்கொம்பாக உள்ளது. நெல் பயிர்களுக்கு மிக அத்தியாவசியமாக உரம் இடவேண்டிய இந்த நேரத்தில் யூரியா, சல்பேட் போன்ற நவீன உரங்கள் கிடைப்பதில்லை. உரம் இடவில்லையானால் நெல் பயிர் 'சாவி'யாகிவிடும்.

கூட்டுறவு சங்கங்களில் பல நாட்கள் காத்திருந்தும் உரம் கிடைக்காது விவசாயிகள் அவதிப்படுகிறார்கள். ஆனால்கறுப்புச் சந்தையில் உரம விற்கப்படுகிறது. ஒரு மூடைக்கு 25 ரூபாய் அதிகம் வைத்து விற்கப்படுகிறது.

எனவே 'பசுமைப் புரட்சி' பற்றி நாளெல்லாம் பறைசாற்றிவரும்தி.மு.க.அரசும், அதன் அதிகாரிகளும் விவசாயிகளுக்கும் உரம்கிடைக்க தக்கநடவடிக்கைஎடுக்க வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன்.

இவண்

பி. திவாகரன்
மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி
தக்கலை

## சோவியத் யூனியனின் சந்திரமண் இந்தியாவுக்கு வருகை

மாஸ்கோ, டிச. 13— சோவியத் யூனியனின் லூனா-16, லூனா-20 என்ற தானியங்கி விண்கலன்கள் கொண்டுவந்த சந்திரனின் மேற்பரப்பில் உள்ள மண் மற்றும் மலைகளின் பகுதிகள் பம்பாயிலுள்ள டாட்டா ஆராய்ச்சி நிலையத்திற்கு ஆராய்ச்சிக்காக கொண்டு வரப்பட்டுள்ளது.

# பள்ளி நிர்வாகியின் தர்பாருக்கு ஆசிரியர் கூட்டணி கண்டனம்

மதுரை, டிச. 13— தமிழ்நாடு தொடக்கப் பள்ளி ஆசிரியர் கூட்டணி திருப்பரங்குன்றம்கிளை டிச. 10-ல் கூடி பாளையங்கோட்டையில் நடந்த ஊர்வலத்தின்போது ஏற்பட்ட சம்பவங்களால் இறந்துவிட்ட மாணவன் லூர்துநாதன் மறைவுக்கு அஞ்சலிசெலுத்தியது.

போடி. பாளையங்கோட்டை, திருச்சிபோன்ற இடங்களில் மாணவர் மீது ஏவிவிடப்பட்ட போலீஸ் தடியடிப் பிரயோகம், துப்பாக்கிச் சூடு சம்பவங்களை திருப்பரங்குன்ற கிளையின் பொதுக்குழு வன்மையாகக் கண்டிக்கிறது.

பாளையங்கோட்டைபேராசிரியர் திரு. சீனிவாசன் போடி உதவித் தலைமையாசிரியர், திருச்சி கிளைவ் ஹாஸ்டல்வார்டன், தமிழாசிரியர் திருமேனிஆகியோர் போலீசாரால் தாக்கப்பட்டு கொடுமைக்குள்ளானதை இவ்வட்டார கிளைப்பொதுக்குழு வன்மையாகக் கண்டனம் செய்கிறது.

சம்பிரதாயமுறைகளுக்கு விரோதமாகஅனுமதியின்றி போலீசார் கல்வி நிலையங்களில் புகுந்து மாணவர்களையும், ஆசிரியர்களையும் அடித்து நொறுக்கிய சம்பவம் குறித்தும்இவ்வட்டாரக் கிளைப் பொதுக்குழு கண்டனத்தையும், வருத்தத்தையும் தெரிவித்துக்கொள்கிறது. இனிமேலும் இம்மாதிரி அசம்பாவிதங்கள் நிகழாவண்ணம் தகுந்த நடவடிக்கை எடுத்துக் கொள்ளுமாறு தமிழக அரசை வேண்டுகிறது.

### அகவிலைப் படி உயர்வால் அவதி

விலைவாசிப் புள்ளி அதிகரித்து அதன் விளைவாக அவதிப்படும் அரசு ஊழியர்கள், ஆசிரியர்களுக்கு உடனடியாக முன் தேதியிட்டு அகவிலைப் படி உயர்வு வழங்கி ஆதரிக்குமாறு தமிழக அரசை இவ்வட்டாரப் பொதுக்குழு ஒருமனதாக வேண்டிக்கொள்கிறது. மத்திய அரசு தனது ஊழியர்களுக்கு அகவிலைப் படி உயர்வு வழங்கி ஈடு செய்துள்ளது என்பதைப் பணிவுடன் இப்பொதுக்குழு அரசுக்கு சுட்டிக்காட்டி மேலான கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறது.

### பள்ளி நிர்வாகியின் தர்பார்

மதுரைநகர்கீரைத்துறை சுந்தராம்பாள் பள்ளியின் நிர்வாகி ஆசிரியர்களைப் பணி நீக்கம் செய்தும், நிர்வாக ஊழல்கள் செய்தும் ஆசிரியர்களைப் பழி வாங்கி வருகிறார். இந்த விவரங்களை தட்டி போர்டு எழுதி வைத்தும், சுவரொட்டிகளில் விளம்பரம் செய்தும், சர்வ கட்சி — சகல சங்கங்கள் அடங்கிய பொதுக்கூட்டம் நடத்தியும் மேற்படி பள்ளி போராட்டக் குழு மக்களிடையே அம்பலப்படுத்திவருகிறது.

எனவே இப்பள்ளி விஷயத்தில் உடனடியாக அரசு தலையிட்டு மேற்படி தனியார் நிர்வாகத்திற்குக் கொடுக்கப்பட்டுள்ள அங்கீகாரத்தை ரத்து செய்து சுந்தராம்பாள் பள்ளியையும், அதில் பணியாற்றும் ஆசிரியர்களையும் அரசு மேற்கொண்டு அரசுடமையாக்கி உத்திரவு வழங்கவேண்டுமாய் தமிழக அரசை இவ்வட்டாரக் கிளை பொதுக்குழு ஒருமனதாகக் கேட்டுக் கொள்கிறது.

## பவர்லூம்களுக்கு மின் வெட்டிலிருந்து விதிவிலக்குத் தருக

மதுரை, டிச. 13— மதுரை புது இராமநாதபுரம் ரோட்டில் உள்ள சுப்பிரமணியர் கோவிலில் எம். சரவணன் தலைமையில், மக்கள் கவிஞர் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் அவர்கள் நினைவு மன்ற உறுப்பினர்கள் கூட்டம டிச. 13-ல் நடைபெற்றது.

அப்போது மன்ற நிர்வாகிகளாக கீழ்கண்டவர்களை தேர்வு செய்யப்பட்டது.

தலைவராக எம். சரவணன் செயலாளராக கே. ஆர். குருமூர்த்தி, உதவி செயலாளராக எம். தண்டீஸ்வரன், பொருளாளராக எம். ஆயேல், கமிட்டி உருப்பினர்களாக வி. சேது ஓ. ஏ. ராஜேந்திரன், கே. சாமி, எஸ். பாண்டி, வி. முத்து, வி. நாராயணன், டி. செல்லப்பா, பி. பெருமாள், கே. ராமசாமி ஆகிய 13 பேர் நிர்வாகக் கமிட்டியாக தேர்ந்தெடுத்தனர்.

மின்சார வெட்டின் காரணமாக சிறு பவர்லூம் தொழிலாளர்கள் மிகவும் பாதிக்கப்பட்டு குடும்பம் நடத்த முடியாமல், ஏறிய விலைவாசியால் மிகவும் துன்பத்தில் ஆழ்த்தப்பட்டுள்ளார்கள்.

ஆகவே, சினிமா, ரைஸ் மில் போன்றவைகளுக்கு மின் வெட்டிலிருந்து விதிவிலக்கு அளித்தது போல் சிறு பவர்லூம் தொழிலுக்கும் விதிவிலக்கு அளிக்க வேண்டுமென்று தமிழக அரசை கேட்டுக்கொள்கிறது.

மதுரை நகரில் எந்தப் பகுதியில் சென்றாலும் பிளாட்பாரத்திலும் பிளாட்பாரம் இல்லாத இடங்களில் ஓரமாக நடக்கும்படி பொதுமக்களை போலீஸ் அதிகாரிகள் ஓயாத பிரச்சாரம் செய்து கவனத்துடன் நடந்து செல்ல அறிவுரை வழங்கி வருகிறார்கள். ஆனால் நடைபாதை பூராவும் தடை பாதையாக பல்வேறு இடங்களில் பிளாட்பாரத்தை அடைத்துக் கொண்டிருப்பதையும் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் கவனித்து ஆவன செய்ய வேண்டுமென்று கோருகிறோம்.

# சரியாதீர்கள்! சற்றே நில்லுங்கள்

## தணிகைச்செல்வன்

★ ★

திராவிட முன்னேற்றக் கழக நண்பர்களே!

கழக ஆதரவைப் பெற்று பதவிக்குப் போய்விட்ட கல்யாணசுந்தரம், இன்று உங்கள் 'காலை வாரி' விடுகிருரே என்ற 'கடுப்பு' உங்களுக்கு ஏற்படுவது சராசரி மனித உணர்வுக்குப் பொருந்தக்கூடியதே.

அரசியல் கூட்டும் பிரிவும் அரசியல் லட்சியங்களின் மேல் அமையுமாயின், அவை சராசரி மனித தர்மங்களுக்கு மாருனவையாக இருப்பினும் அரசியல் தர்மத்துக்கு அவசியமானவையே என அங்கீகரிக்கப்படலாம்.

அரசியல் தர்மம் என்பது தனிமனித அபிலாசையை சமூக தர்மத்துக்கு உட்படுத்துவதேயாகும்.

இந்தச் சமூகதர்மமஎன்ற பெரு நோக்கத்தின் அடிப்படையில்தான் 1969-ல் மார்க்சிஸ்ட் கட்சி உங்கள் தோழமையைத் துண்டித்துக்கொண்டது!

இந்தச் சமூக தர்மத்திற்காகத்தான் வருந்தி அழைத்த 'முற்போக்குக் கூட்டணி'யின் 'வசீகரத்துக்கு' ஆளாகாமல், அது மக்களின் பக்கம் நின்றது— 1971 தேர்தலில்.

ஆனல் கருணாநிதிக்கோ, 'கட்சி தர்மத்தை'விடசமூக தர்மம்பெரிதாகப்படாததால் தங்கள் அரசியல் லட்சியங்களை, அவர்கள் ஆபாசங்களுக்கேற்ப வளைத்துக் கொண்டார்கள். அதனல் ஏற்பட்ட வக்கரிப்புகள் தாம்—

எழுபதில் 'பிற்போக்குக் கருணாநிதி' எழுபத்தொன்றில் 'முற்போக்குத்தலைவராக' கல்யாணசுந்தரனரின் 'தீர்ப்பு'களாக தரிசனம் தருவதற்குக் காரணம்.

நண்பர்களே!

எங்களுக்குள்ள கவலையெல்லாம் குறுகிய அரசியல் வட்டத்துக்குள் நீங்கள் நடத்திக்கொள்ளுகிற 'குடுமிபிடிகுஸ்திகளுக்கெல்லாம், மனித வர்க்கத்தின் மகத்தான செல்வமான கம்யூனிசம் என்ற கருவூலமே சவாலுக்கிலுக்கப்படுகிறதே என்பதுதான்.

கல்யாணசுந்தரத்தின் மேல் 'காழ்ப்பு' இருந்தால் கல்யாணசுந்தரமும் அவரது கட்சியும் விமர்சிக்கப்படவேண்டுமே ஒழிய, கம்யூனிசமே இப்படித்தான்" என்று கல்யாணசுந்தரம் என்ற கண்ணுடியை வைத்துக்கொண்டு நீங்கள் கம்யூனிசத்தின் பரிமாணங்களைப் பரிகசிப்புக்குள்ளாக்குவது, இரண்டே முடிவுகளுக்குத்தான் எங்களை இட்டுச் செல்லும். ஒன்று-நீங்கள் கம்யூனிச நெறிகளையே அறியாதவர்களாயிருக்க வேண்டும் அல்லது- 'திராவிடத்தின் உண்மையான கம்யூனிஸ்ட் தி, மு. க. தான்" என்று ஊரெல்லாம் நீங்கள் உரக்க முழக்கமிட்டது உழைக்கும் வர்க்கத்தை ஏமாற்றுவதற்காக இருக்கவேண்டும்.

அண்ணு இருந்த காலத்தில் கூடக் கம்யூனிஸ்ட்டுகளுக்கும், கழகத்துக்கும் கருத்து மோதல் ஏற்பட்டதுண்டு. அப்போதெல்லாம் அண்ணுதுரை மிக உயர்ந்த சுதந்திரம் ஒன்றைக் கடைப்பிடிப்பது வழக்கம்.

"கம்யூனிஸமே அபாயமானது" என்று கூறி தன்னைப் பச்சையான கம்யூனிச விரோதி என்று அவர் காட்டிக் கொண்டது கிடையாது.

"நான் உங்களைவிட உயர்ந்த கம்யூனிஸ்ட் நான் தான் ஸ்டாலினிடமும் மாலங்கோவிடமும் போக அருகதையுள்ளவன்" என்ற பாணியில் அவர் கம்யூனிஸ்டுகளைச் 'சந்திப்பது, வழக்கம்.

'கம்யூனிஸ்ட்டுகளையும் நான் சிறந்த கம்யூனிஸ்ட்' என்று கூறுவதில் உண்மை உண்டோ இல்லையோ, கம்யூனிசத்துக்கு 'எதிர்நீச்சல்' அடித்து அரசியல் வளர்ப்பது இயலாதது என்பதை அவர் உணர்ந்திருந்தார் என்பதுதான் இதில முக்கியமான செய்தியாகும்.

அதனல்தான் அவர் அன்றைய திராவிட நாடு, குடியரசுஇவைகளில் சோவியத் பற்றியும், சீனம் பற்றியும். லெனின் பற்றியும், மாசேதுங் பற்றியும் கட்டுரைகள் எழுதிக் குவித்தார். சேலம், கடலூர் சிறைகளில், அவர்களுக்கு மத்தியில் துடிக்கத் துடிக்க சுட்டுத்தள்ளப்பட்ட கம்யூனிஸ்டுகளைப்பற்றி அவர் 'காவிய' பாஷையில் பேசியதும் எழுதியதும் — 'கம்யூனிச 'எதிர்நீச்சல்' செலாவணியாகாத சித்தாந்தம் என்று தீர்க்கமாக உணர்ந்திருந்ததால்தான்.

"தி. மு. கழகம் இருக்கும் வரை திராவிடநாட்டுக்கு வேறு கம்யூனிஸ்ட் கட்சி தேவையில்லை', என்று விளையாட்டுத்தனமான விவாதங்களை வளரவிட்டதற்கு அடிப்படை, அவர் தன்னைக் கம்யூனிசத்தின் விரோதி என்று கடைசிவரை சித்தரித்துக்கொள்ளச் சித்தமாயில்லை என்பதுதான்; இந்த ராஜதந்திரம் அவருக்கு நிறைய லாபப் பங்கீட்டைச் சம்பாதித்துத் தந்தது. குறிப்பாகஉழைப்பாளி வர்க்கம் அவரைச் சந்தேகிக்க முடியாதபடி ஒரு 'தத்துவத் திரை அவரைப் பார்த்தியிருந்தது.

அதுசரியா?தவரு? என்ற வாதத்துக்குள் இப்போது நாம் போகவில்லை.

அவருடைய இன்றைய வாரிசுகள் கம்யூனிசத்தை அணுகும்முறையில் உள்ள வேறுபாட்டை விளக்கவே இதைக் கூறுகிருேம்.

8—12—72 முரசொலி இதழில் வந்த கட்டுரை இதற்குச் சான்ருகும்

"கல்யாணசுந்தரம் அபாயமானவர்" என்று விளக்குவதற்குப் பதிலாக அந்தக்கட்டுரை "கம்யூனிசமே அபாயமானது' என்று கூறிமுடித்திருக்கிறது!

கம்யூனிசத்தையும் கல்யாணசுந்தரத்தையும் சமப்படுத்திக்கொண்ட இமாலயத்தவருகமட்டும் இது இருந்தால் நாம் கவலைப்படமாட்டோம்.

காங்கிரஸ் அருணுசலம் கம்யூனிஸ்ட்டுகள்பற்றி எழுதிய புத்தகத்தையும், 1944ல் ஜெயப்பிரகாஷ் நாராயண் கமயூனிசத்தின் ஜென்மப் பகைவர்—'நாங்கள்' என்று அவர் நாலாந்தர நடையில் திட்டியதையும், இன்னபிற தொல்பொருள் மியூசியத்திலிருந்து தோண்டியெடுத்த பழஞ்சான்றுகளையும் பிடித்துத்தொங்கித் தீரவேண்டிய பரிதாப நிலை முரசொலிக்கு ஏன் ஏற்பட்டது?

முடிவாக "கம்யூனிசம் என்ருல் கொடிய விஷம்" என்று கூறிய 'இட்லர் தேவனின்' பிளாட்டின மொழிகளையும் எடுத்தாண்டு, அவன் அவசரப்பட்டதால்தான் அழிந்தான் இல்லையேல், அந்த விஷத்தையே சலன் வென்றிருப்பான்' என்பது போன்ற 'அரசியல் திருஷ்டி'யையும் இணைத்து சோவியத் வெற்றிக்காக 'சோககீதம்' பாடுகிற ஒரு புதுப்பிறவியை தி.மு.கழகம் இப்போதுதான் சந்திக்கிறது என்று கருதுகிருேம்.

(கம்யூனிசம்பற்றி அந்தக் கட்டுரையாளர் நிறையப் படித்திருப்பதாக வேறு பீற்றிக்கொண்டிருக்கிருர். 'கம்யூனிசத்தின் காப்புச் செய்யுளைக்'கூட இவர் புரிந்து கொள்ளவில்லை என்பதைத் தனியாக விளக்குவோம்) நிச்சயமாக அண்ணு இந்தக் கருத்தை அங்கீகரித்திருக்க முடியாது. "பாட்டாளி வர்க்க சித்தாந்தத்தின்பகை முகாமுக்கு நானும் ஒரு பகடைக்காயாகிறேன்" என்று பகிரங்கமாக அறிவித்துக் கொண்டு முரசொலி அவர்களுக்கும் "படுக்கை விரித்தாக' வேண்டிய கட்டாயம் ஏன் ஏற்பட்டது என்று தெரியவில்லை,

இந்தப் பின்னணியில் தான் முதல்வரின் சட்டமன்றப் பேச்சில் வெளிவந்த ஒரு கருத்தையும் நாம் விமர்சித்தாக வேண்டும்.

"சென்ற தேர்தலில் நாங்கள் இந்திரா காங்கிரசோடு சேர்ந்ததற்கு எங்களுக்கு இதுவும் வேண்டும்; இன்னமும்வேண்டும் இதை ஹண்டே அவர்கள் ராஜாஜியிடமும் பொன்னப்பநாடார் காமராஜரிடமும் கூறும்படி கேட்டுக் கொள்கிறேன்"

இந்திரா காக்கிரசுடன், தி. மு. க. இணைந்து நின்றதற்காகப் "பாவமன்னிப்பு கோருகிருர் முதல்வர்.

மெத்த மகிழ்ச்சி!

ஆனல் யாரிடம்?

ராஜாஜியிடமும், காமராஜரிடமும்!

"இந்திரா அரசு கவிழ்க்காதா? இந்த அரசு கவிழாதா?" என்று அல்லும் பகலும் 'உறுமீனுக்காக' 'வாடியிருக்குமாம்' இந்தக் கொக்குகளிடம் மன்னிப்புக் கோருகிருர் ஏதோ அவர்கள் 'இந்திரா' என்ருலே எட்டிக்காய் என நினைப்பவர் போல.

இந்திர கட்சியும் சுதந்திராக் கட்சியும் சேர்ந்து பெற்ற பிள்ளைதான் இன்றைய குஜராத் அரசு என்பதை மறந்துவிட்டாரா கருணாநிதி?

மேற்கு வங்கம், கேரளம் ஆகியமாநிலமுன்னணிகளையிலும் கவிழ்க்க பழைய காங்கிரசும், புதுக் காங்கிரசும் 'பகீரத' வேலைகள் செய்ததைக் காணுதவரா கருணாநிதி?

அவ்வளவு ஏன்? "அரியாங்குப்பம்" கழும்பு இன்னும் மறைந்திருக்காதே —காமராஜரும் இந்திராவும் 'காலம் கனிந்தால்' ஒன்றுபடக் கூடியவர்கள் என்பதற்கு அரியாங்குப்பத்தைவிடவா ஒரு அத்தாட்சி தேவை?

என்ருலும் கருணாநிதி காமராஜரையும் — ராஜாஜியையும் தான் தன் 'காவல் தெய்வங்களாகவர்ணித்துக் கொண்டிருக்கிருர் என்ருல் என்ன பொருள்?

"இந்திரா காங்கிரஸ் ஒரு சிலந்தி வலை. அதில் இணைந்து நிற்பது தற்கொலை" என்று துணிந்து—தணித்து நின்று கூறியதால்தானே மார்க்சிஸ்ட் கட்சி சென்ற தேர்தலில் உங்களால் "மண் வாரித் தூற்றப்பட்டது"

நீங்கள் மன்னிப்புக்கேட்பதானல் மார்க்சிஸ்ட் கட்சியிடம் தானே கேட்டிருக்க வேண்டும்?

அந்த 'மகத்தான பாக்கியம்' எங்களுக்குக் கிட்டவில்லையே என்று நாங்கள் வாயிலடித்துக் கொள்ளப் போவதில்லை.

ஆனல், கம்யூனிசத்தைப் பற்றிய முரசொலியின்,அவதூறுகளுக்கும், காமராஜர்-ராஜாஜி மீது நீங்கள் வீசும் கடைக்கணணுக்கும் இசைவான தொடாபு ஒன்றிருப்பதைக் கவனித்தீர்களா எனக் கேட்கிருேம்?

நாங்கள் எச்சரிக்க விரும்புவதெல்லாம் நீங்கள் வேகமாக உருண்டு செல்கிறீர்கள்.

அந்தப் பள்ளத்தை நோக்கி!

அதைத் தடுத்து நிறுத்துவது தமிழகத்துக்கு திமுக கழகத்துக்கு மிக மிக நல்லது.

# அடக்குமுறைக்கு பட்டதாரிஆசிரியர்கள் கண்டனம்

காமன் கோட்டை, டிச.12—

இராமநாதபுரம் மாவட்ட பட்டதாரி ஆசிரியர் கழக போராட்டக்குழு கீழ்க்கண்ட அறிக்கையை விடுக்கிறது. இக்குழுவில் திருவாளர்கள் என். திருநாவுக்கரசு (குழுத்தலைவர்) அ. ஜகந்நாதன், கதிரேசன் ஜி. சங்கமேஸ்வரன். எஸ். எம். மல்லையா ஆகியோர் உள்ளனர்.

பாளையங்கோட்டை பேராசிரியர் திரு. சீனிவாசன், திரு. திருபேனி உயர்நிலைப்பள்ளி தலைமையாசிரியர், உதவி தலைமை ஆசிரியர், மாணவ நண்பர்கள் போன்ருேர் போலீஸாரால் தாக்கப்பட்டது குறித்து ஆசிரிய சமுதாயம் பேரதிர்ச்சியும், ஆழ்ந்த கவலையும் கொண்டுள்ளது. நாட்டிற்கு நல்லதொரு தொண்டாற்றும் வாய்ப்பு தங்களுக்கு அளிக்கப்பட்டுள்ளது எனக் கருதி மகிழ்ந்து பணியாற்றும் ஆசிரிய சமுதாயம் இப்போது 'அடிவாங்கும்' பரிதாப நிலையை எண்ணி இப்பணிக்கு ஏன் வந்தோம் என வருந்தும் அவலநிலை உருவாகியுள்ளது. இந்நிலை தொடர அரசு வாய்ப்பளிக்க வேண்டாம் எனக் கேட்டுக் கொள்கிருேம்,

போலீஸாரின் நடவடிக்கையால் உயிரிழக்கும் நபர்களுக்கு அரசு நிதி வழங்குகிறது. போலீஸ் தாக்குதல தொடர்பாக உயிரிழந்த மாணவர் திரு. லூர்துநாதன், திருச்சியில் பலத்த காயங்களுடன் மருத்துவமனையில் சிகிச்சை பெற்ற மாணவர்கள் ஆகியோருக்கு உதவ அரசு முன்வாராமை கண்டும் அமைச்சர்கள் அப்பகுதிக்கு விரையாமை கண்டும் வியப்படைகிருேம்.

ஆசிரிய சமுதாயத்தின் பொறுமையை தவருக அரசு எண்ணிவிட வேண்டாம் என்று இக்குழு கேட்டுக் கொள்கிறது.

# உ. பி. யில் ஒரு வெண்மணி

புதுடெல்லி, டிச. 13—

உ. பி. மாநிலத்தில் அசாம்கர் அருகிலுள்ள நோனாரி கிராமம் தீயிட்டுக் கொளுத்தப்பட்டதும் இருவர் படுகொலை செய்யப்பட்டதும் அதன் காரணமாக அந்தக் கிராமமே, அழிக்கப்பட்டதும் ஏற்கனவே தெரிந்த செய்தி.

நோனாரி—அசாம்கர் அருகிலுள்ள சின்னஞ்சிறு கிராமம், ஏழை எளிய ஜனங்கள், அரைவயிறும் கால் வயிறுமாக வாழ்ந்து வந்த கிராமம்— அந்தக் கிராமம் தான் எந்த நிலைக்குத் தள்ளப்பட்டுவிட்டது தெரியுமா?

அந்த நோனார் கிராமத்தில் ஆத்மா, கிலிபிடித்துச் சாகிறது. அங்குள்ளவர்கள் ஓடி ஒளிந்துவிட்டனர் யாருக்கும், ஏன் போலீசுக்கும் கூடத் தெரியாது அவர்கள் எங்கு சென்றனர் என்பது. ஆடு மாடுகள்கூட, எங்கோ ஓடிவிட்டன.

ஆம். இன்றும், அந்த பயங்கரமான இரவுக்குப் பின்-1 மாதம் கழிந்த பின்பும் அங்கு பீதி நிலவுகிறது.

### எங்கும் ஒரே சாம்பல் மயம்

சாம்பல்—ஒரு காலத்தில் வீடுகளாக இருந்தவை சாம்பலாகிவிட்டன. சலசலக்கும் காற்றில் பறக்கிறது.

அந்த கிராமத்தைச் சுற்றியுள்ள எந்தப் பெண்ணைப்பார்த்தாலும் அவள் கண்களில் கண்ணீரோடு சோகக்கதை சொல்கிருள். வெறுப்பும், விரோதமும், குரோதமும் இழைத்த கொடுமைகளைச் சொல்லுகிருள்.

வளைந்து வளைந்து செல்லும் பாதைகள் சாம்பலால் போர்த்தப்பட்டிருக்கின்றன. மண்ணும் வைக்கோலும் கொண்டு வேயப்பட்ட குடிசைகள், செங்கள் வீடுகள், இன்று குப்பைமேடுகளாக ஆக்கப்பட்டுவிட்டது.

மாட்டு வண்டிகள் தீக்கிரையாயின இருப்புப் பெட்டிகள்—தகர டப்பாக்கள் உருக்கப்பட்ட உலோகக் கழிவாகி விட்டன.

இந்த ஊழிக் கூத்து, நவம்பர் மாதம் 14-ந் தேதி இரவு நடந்தது.

### இரட்டைக் கொலை

நடந்து முடிந்த பஞ்சாயத்து தேர்தலில், வெற்றி பெற்றவர்களுக்காக வேலை, செய்தவர்கள், சீதாராம் என்பவரும் ஜைதுன் என்பவரும். அவர்கள் இருவரும் படுகொலைசெய்யப்பட்டிருக்கிருர்கள்.

இந்த இரட்டைக் கொலை நடந்த சில மணி நேரத்தில் கிட்டத்தட்ட ஆயிரம் பேர் வேல்கம்பு துப்பாக்கிசகிதம் இந்த கிராமத்தை—நோனாரி கிராமத்தைச்—சுற்றி வளைத்துக் கொள்கிருர்கள். அதே சமயத்தில், போலீசும் வருகிறது. வெறிபிடித்த கூட்டம், கிராமத்தையே தீயிட்டுப் பொசுக்குகிறது. கொள்ளையடிக்கிறது. போலீசும் இந்தக் கொடுமையைப் பார்த்துக் கொண்டு கைகட்டிக் கொண்டு இருக்கிறது.

### மயான அமைதி

இந்தக்கொடுமையான நிகழ்ச்சி நடந்து 1 மாதமாகிறது. இது பற்றி கேட்கநாதியில்லை. மத்திய அரசின் ரகசியபோலீசைக் கொண்டு உ. பி. அரசு விசாரணை நடத்தப்போகிறதாம்.

உ. பி. மாநில பெரிய போலீஸ் அதிகாரி நோனேரி கிராமம் கட்டுக் கடங்கி அமைதியாக இருக்கிறது என்று அறிக்கை விட்டிருக்கிருர்.

ஆம்— அமைதியாக— சாம்பல்— ஒரு காலத்தில் வீடுகளாயிருந்த சாம்பல்— சலசலக்கும காற்றில் புழுதியாகப் பறந்துகொண்டிருக்கிறது.

# தேங்காக்கல் எஸ்டேட் லாக்-அவுட் நீக்கப்பட்டது

வண்டிப்பெரியார், டிச. 14—

வண்டிப் பெரியார் டிச. 11 இங்குள்ள தேங்காக்கல் எஸ்டேட்டில் தொழிலாளர்கள் தங்களின் நியாயமான கோரிக்கைகளுக்காகப் போராட்டம் நடத்தினர். ஒருமாதகாலம் எஸ்டேட் அடைக்கப்பட்டிருந்தது.

தோழர் கே. ஐ. ராஜன் எம். எல். ஏ. டார்ஜிலிங்கிற்கு போயிருந்தபடியால் பிரச்சனை தீராமல் இருந்தது அவர் வந்து பேச்சு வார்த்தை நடத்தியதில் தொழிலாளர்களின எல்லா கோரிக்கைகளும் அங்கீகரிக்கப்பட்டது. "ஈற்றை' ஒன்று மாத்திலும் நிராகரிக்கப்பட்டது.

ஆரம்பத்தில் ஐக்கிய கமிட்டி சார்பில் போராட்டம் ஆரம்பிக்கப்பட்டது. தோழர்கள் எம். சி. துரை எஸ். துரைப்பாண்டி, டி. கே. கோவிந்தன், கே. கே. கிருஷ்ணன் குட்டி ஆகியோர் ஒருமாதகாலமாக பாடுபட்டனர்.

ஐக்கியக் கமிட்டியில் இறுதியில் சி. ஐ. டி. யூ வின் கீழ்இயங்கும் பீர்மேடு தோட்டத்தொழிலாளி யூனியனைத் தவிர மற்றுள்ள தொழிற் சங்கங்கள் யாவும் போராட்டத்திலிருந்து ஒளிந்து கொண்டது என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

# கேரளத்தில் லட்சம்வீடுகள் தருவதாக ஏமாற்றிய அமைச்சர் அடியோடி பட்டபாடு

இடுக்கி, டிச. 13—

வீடற்ற ஏழைகளுக்கு இலட்சம் வீடுகள் கட்டிக் கொடுக்கப் போவதாக வெற்று வாய்ப்பறையடித்த கேரள அமைச்சர் கே. ஜி. அடியோடி, 11-ம் தேதி இங்குவந்தபோது அவருக்கு முன்ஞல்-குடியிருப்பு அகற்றப்பட்டஆயிரக்கணக்கான குடும்பங்கள் ஆர்ப்பாட்டம் செய்தனர். ஆர்ப்பாட்ட நிகழ்ச்சி எழுச்சி கொண்ட கடலலையின் ஓசைபோன்று இருந்தது

11-ம் தேதியன்று 11 மணி அளவில் இடுக்கிக்கு அமைச்சர் அடியோடி காரில் வந்தார். அச்சமயத்தில்சமுத்திரம் போன்றுஒரு பெரும் மக்கள் கூட்டம் தம்மை நோக்கி வருவதை அவர் கண்டார்.

### அமைச்சரின் ஏமாற்றம்

தம்மை வரவேற்கத்தான் மக்கள் இப்படி பெருந்திரளாக வருகிருர்கள் என்று அமைச்சர் நினைத்துக் கொண்டு, காரை நிறுத்தி காரிலிருந்து இறங்கினர். அப்போது அமைச்சருகக்கு ஏமாற்றம்தான் காத்திருந்தது.

ஆயிரக்கணக்கான பாட்டாளிகள் தம்மை நோக்கி ஆர்ப்பரித்து வருவது வரவேற்பதற்கு அல்ல: எதிர்த்துக் கண்டனம் முழங்கவே என்பதைஅறிந்துகொண்ட அமைச்சர் அடியோடி, உடனே தமது காரில் ஏறி அவ்விடத்தைவிட்டு அகன்ருர்.

இந்த ஆர்ப்பாட்டம் சட்டமன்ற எதிர்க்கட்சி உறுப்பினர்களான ஜான்-மஞ்சூரன், பி. ஜே. ஜோசப், ஏ. ஸி சாக்கோ, வி. டி. ஸெபாஸ்டியன், ஜி. வரதன் கே. ஏ. ராஜன் ஆகியோருடைய தலைமையிலும் போராட்டக்குழுத் தலைவர்களின் தலைமையிலும் நடைபெற்றது.

### போலீசே துணை

இரண்டு வேன்கள் நிறைந்த போலீசாரின் துணையுடன் அமைச்சர் அடியோடி லட்சம் வீடு பற்றி சம்மேளனம் நடக்கும் ஒரு கிளப்புக்குச் சென்ருர். ஆனல், அங்கும் அமைச்சரை ஏழை விவசாயிகள் விடவில்லை. குடிசைகள் அழிக்கப்பட்டு கடந்த 45 நாட்களாக கொட்டு மழையில் நனைந்து எரிக்கின்ற வெய்யிலில் காய்ந்து உருக்குலைந்து போன மலையோர விவசாயிகள் சின்னஞ்சிறு பிஞ்சுக் குழந்தைகளையும் மடியில் வைத்துக்கொண்டு அரசின் அடக்குமுறைக்கு எதிர்ப்புத் தெரிவிக்க கிளப்பு மைதானத்தில் உட்கார்ந்து சத்தியாக்கிரகம் இருந்தனர் கண்டன முழக்கம் எழுப்பினர்.

அப்போது, 'கிளப்பு' வராண்டாவில் ஆயுதப் போலீசார் சுற்றிச் சூழ்ந்திருக்க அவர்களுக்கு மத்தியில் அமைச்சர் அடியோடி நின்றவாறு ஆர்ப்பாட்டம் செய்யும் விவசாயிகளைப் பார்த்தார்.

### சொல்லும் செயலும்

வீடற்றவர்களுக்கு லட்சம் வீடு கட்டித் தருவதாகக் கூறிய அரசு ஏழை விவசாயிகள் கட்டிய குடிசைகளை யெல்லாம் அழித்து விட்டது.

குடிசைகள் அழிக்கப்பட்டு தவிக்கும் 1500 விவசாயக் குடும்பங்களின் பிரச்னைகளைத் தீர்க்கக் கோரிதான் நாங்கள் சத்யாக்கிரகம் இருக்கிருேம்-என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சட்டமன்ற உறுப்பினரானதோழர் சாக்கோ, அமைச்சருக்கு எடுத்துச் சொன்னர்.

### சாகசம் பலிக்கவில்லை

வியப்பில் ஆழ்ந்த அமைச்சர் அடியோடி ஏழைவிவசாயிகளைஏமாற்றி அனுப்பிவிடலாம் என்ற நோக்கில் ஒரு சாகசமான சொற்பொழிவு நடத்தினர்.

அமைச்சரின் 'அழகான' பிரசங்கத்தைக் கேட்டு அங்கு கூடியிருந்த எவருமே கைதட்டவில்லை — ஒரே ஒரு சப்-இன்ஸ்பெக்டரைத் தவிர! குடியிருப்பு அகற்றப்பட்டவர்களின் பிரச்னைகளுக்குத் தீர்வுகாணும்படியாகஇல்லாத அமைச்சரின் பிரசங்கத்திற்கு எதிராக சத்தியாக்கிரகம் இருந்த விவசாயிகள் கண்டன முழக்கம் எழுப்பினர்.

பிறகு, விவசாயிகளுக்கு ஆதரவாகவும் அவர்களது பிரச்னைகள்பற்றி கூறவும் சட்டமன்ற உறுப்பினர்களான கே. ஏ. ராஜன் ஜி. வரதன், பி.ஜே.ஜோசப், ஏ. சி. சாக்கோ, ஜான்—மஞ்சூரன் ஆகியோரும் போராட்டக் குழு கன்வீனர் தோழர் பி. யூ. தேவஸ்யம், போராட்டக் குழுவின் மாவட்டச் செயலாளர் தோழர் பி. பி. மஹமத் ஆகியோரும் பேசுவதற்குத்தயாராகினர். அப்போது அவர்களை ஆயுதப் போலீசார் பேசவிடாது தடுத்தனர். ஒரே இடத்தில் இரண்டு கூட்டம் நடத்துவதற்குஅனுமதிக்கமாட்டோம் என்றனர். ஆனல் போலீசாரின் தடையை மீறி, தோழர்கள் தங்களது சொற்பொழிவை நடத்தினர்.

நிலைமை முற்றுகிறதுஎன்பதை அறிந்த மாவட்டக் கலெக்டரும், ஆர். டி. ஓ. அதிகாரியும் ஸ்தலத்திற்கு வந்தனர்.

மீண்டும் லட்சம் வீட்டுச் சம்மேளனம், 'கிளப்'பில் ஆரம்பமானது. எனினும் ஆயிரக்கணக்கான விவசாயிகளின் கடலலை ஓசை போன்ற ஆர்ப்பாட்டததின் மத்தியில் நடைபெற்ற-அமைச்சர் அடியோடி கலந்து கொண்ட —லட்சம் வீட்டுச் சம்மேளனம்ஒருதீர்மானமும் நிறைவேற்ற முடியாமல் கலைந்தது.

# உயிரைக் கொடுத்த இராணுவ வீரருக்கு அஞ்சலி செய்யும் லட்சணம்

புதுடெல்லி, டிச. 13—

நாட்டைக் காக்கும் பணியில் உயர்நீத்த இராணுவ வீரர்களது மனைவிமாகளுக்கு போதுமான உதவித தொகைஅளிக்கப்படவில்லை என்று நாடாளுமன்றத்தில் காங்கிரஸ் உறுப்பினர் ஏ. ஜி. குல்கர்னி கேள்வி எழுப்பினர்.

யுத்தத்தில் வீர மரணமடைந்த ராணுவ வீரர்களின் மனைவிமார்கள் கூட்டம் நாசிக்கில் நடந்தது. இக்கூட்டத்தில் மிகக் குறைந்த இந்த உதவித் தொகையைக்கூட சரிவரக் கொடுப்பதில்லை என்று குற்றம் சாட்டினர் என்று கூறினர்.

நாட்டைக் காக்க தங்கள் இன்னுயிரையே ஈந்த அந்த வீரத் தியாகிகளின் மனைவிமார்களுக்கும் குழந்தைகளுக்கும் சரிவர உதவிகள் கிடைப்பதில்லை என்று பல புகார்கள் வந்துள்ளதானது தூங்கு மிகவும் வருத்தத்தை அளிக்கிறது என்று லெப்டினட் திரு. கெ. பி. காண்டத்தே குறிப்பிட்டுள்ளார். இந்த நிலைமை நீடித்தால் இராணுவத்தில் சேர இளைஞர்கள் முன்வரமாட்டார்கள் என்று அவர் எச்சரித்தார்.

# உர விற்பனையில் ஊழல்

திருமங்கலம், டிச. 13—

திருமங்கலம் — உசிலம்பட்டி, டி. கல்லுப்பட்டி ஊராட்சி ஒன்றியத்தில் உரம் வாங்கும்விவசாயிகளிடம் ரசீது கொடுக்காமல் கண் சிகிச்சை முகாம் நிதி என்று ரூ. 5 வசூல் செய்கிருர்கள். விவசாயிகள் சோளம், கம்பு வாங்கினல் தான் உரம் என்று கட்டாயப்படுத்தி ஒரு கிலோ கம்புக்கு அல்லது ஒரு கிலோ சோளத்திற்கு ரூ 8 வசூல் செய்கிருர்கள்.கிராமசேவக்கிடம் கையொப்பம் வாங்க ரூ. 2 கொடுக்கவேண்டியுள்ளது ஆக ரூ. 65 இருந்தால் தான் ஒரு மூடை யூரியா விவசாயிகள் வாங்க முடியும். ஆனல் அதனுடைய உண்மையான விலை ரூ. 49-15 காசுதான். கொடுக்க வேண்டியதோ ரூ.65. இதை எதிர்த்து பஞ்சாயத்து யூனியனில் வருகிற18—12—72ந் தேதி ஆர்ப்பாட்டம் நடத்த முடிவு செய்யப்பட்டுள்ளது.

செல்லம்பட்டி பஞ்சாயத்து யூனியனில்ஒருமூடை யூரியாவிற்கு ரூ 62 வாங்குகிருர்கள். ரூ. 50 உரத்தின் விலை. ரூ. 12 கண் சிகிச்சை முகாம் நிதி.

குறிப்பு:— 12—12—72-ந் தேதி டி. கல்லுப்பட்டியில் பஞ்சாயத்து யூனியன் கூட்டம் நடைபெற்றபொழுது இரு கோஷ்டியாக பஞ்சாயத்து தலைவர்கள் பிரிந்து கண் சிகிச்சை முகாம் நிதிக்கு கணக்கு வேண்டும் என்று ஒரு தரப்பினர் கூறினர்கள். இதன் விளைவாக டி.கல்லுப்பட்டி கமிஷனரை கள்ளிக்குடி யூனியனுக்கு மாற்றிவிட்டார்கள்.

# நெடுஞ்சாலை தொழிலாளர்கள் சத்யாக்கிரகம்

தக்கலை. டிச. 14—

நெடுஞ்சாலை கிராம பணித்துறையில் 40 வருடங்களாக வேலை பார்த்து வந்த தொழிலாளர்களை வேலை நீக்கம் செய்யப்பட்டுள்ளது. வேலை நீக்கம் செய்யப்பட்ட தொழிலாளர்களுக்கு கிராஜூட்டி கிடைக்க நவம்பர் 15 முதல் குழித்துறை உதவிப் பொறியாளர் அலுவலகமுன் டி. முத்தையன், ஒய். ராஜயன், என். வேலாயுதன், எஸ். யோவேல், எஸ். நல்லதம்பி ஆகியோர் சத்தியாக்கிரகம் செய்து வருகிருர்கள். இவர்களை கோட்ட பொறியாளர் மிரட்டிவருகிருர்.

## நடக்க இருப்பவை

சோழவந்தானில்

பொதுக் கூட்டம்

19-12-72-ந் தேதி செவ்வாய் கிழமை ஜீவா மன்றம் சந்தை முன்பு

தோழர்கள்

**எஸ். பாலவினுயகம்**

(நெல்லை மாவட்ட செயலாளர்)

**என். ராமச்சந்திரன்**
**சி. நீலமேகம்**
**எம். சங்கரலிங்கம்**

மற்றும் பலர் பேசுவார்கள்.

# கண்ணோட்டம்

## எந்த வர்க்கத்துக்கு பொன்னாடு? எந்த வர்க்கத்துக்கு மண்ணாடு?

கொய்யாப்பழ விளைச்சல் வத வதனு அதிகமாகி விட்டால்......"எங்கு பார்த்தாலும் கொய்யாப்பழம் தண்ணீர் பட்ட பாடு ஆகிவிட்டது"—என்று சொல்லுவோம்.

இப்படி எந்தப் பொருளாவது அதிகமாகக் கிடைத்தால், "தண்ணீர் பட்ட பாடாக" என்று அடைமொழி சேர்த்துச் சொல்லுவோம். ஏனென்ருல், தண்ணீர் அவ்வளவு சரசமாகக் கிடைப்பதினலே, அதிகமாகக் கிடைக்கும் சாமான்களைப்பற்றிக் குறிப்பிட வேண்டிய சமயத்தில். அப்படிச் சொல்லுகிருேம்.

இந்தக் காலத்தில் தண்ணீர் பட்ட மாதிரி எந்தச் சாமான் அகப்படுது?—சொல்லுங்கள்!

அதிகமாக உற்பத்தியாகி மார்க்கெட்டுக்கு வரும் சாமான்கள் எதுவும் மலிவாகக் கிடைப்பதில்லை. அது அழுசம் பொருளாக இருந்தாலும் சரி,எதுவுமே தண்ணீர் பட்ட மாதிரி மலிவாகக் கிடைப்பது இல்லை.

இப்படி அதிக அளவில் உற்பத்தி ஆகியும் கூட, சேமிப்புக்காரர்களின் பேராசை காரணமாக, சரக்குகளின் விலையைத் தூக்கலாகவேவைத்துக் கொள்ளையடிக்கிருர்கள்.

அதேபோலத்தான் தங்கமும் நம்ம நாட்டிலே தண்ணீர்பட்ட பாடாகத்தான் இருக்கிறது விலை என்னமோ சவரன் 200 ரூபாய்க்கு விற்ருலும்......தங்கம் என்னமோ வத வதனு எங்கும் அடிபட்ட மணியமாகத்தான் இருக்கிறது.

வரியோ வம்போ போட்டு......கடனே உடனே வாங்கி......நோட்டுகளையும் அடித்துத்தள்ளி.........ஐந்தாண்டுத் திட்டங்களைப் போட்டு......ஆலைகளையும் அணைகளையும் கட்டி......உற்பத்தியைப் பெருக்கி......இத்தனைக்கும் உழைத்துக் கொட்டிய உழைப்பாளிக்கு அநியாயக் கூலி கொடுத்து!......அவன் வாயிலும் வயிற்றிலும் அடித்தும்......விலைவாசிகளை ஏற்றியும்......கொள்ளை அடிச்ச பணம... கோடி கோடியாய்க் குவிச்ச பணம... கணக்குக் காட்டிய வெள்ளைப் பணம்! கணக்குக் காட்டாத கள்ளப் பணம்!

இந்தப் பணத்தைக் கொண்டு அடுக்கு மாடிகளாக வாங்கினலும் எத்தனையை வாங்கித் தொலைக்கிறது? வயற்காடா வாங்கினலும் எத்தனை ஆயிரம் ஏக்கர் வாங்குவது?.........ரொகக கேஷாகவே வைத்திருந்தாலும் எத்தனை லட்சத்தை, எத்தனை கோடியை வைத்திருப்பது?...

இப்படி யெல்லாம் மொத்தையாக வைத்திருப்பது ஆபத்தில் அல்லவா கொண்டு போய் விடும்?

வரித் தொல்லைகள் வருமே! வரம்புத் தொல்லைகளும் வருமே!

எத்தனை பேர் பேரில் பட்டாக்களும் பத்திரங்களும் பிரித்துப் பிரித்து மாற்றினலும், இன்னும் மொத்தையாக இருக்குதே! மேலும் மேலும ஆறுபோல பணம் வந்து பாயுதே! ...

இதெல்லாம் என்ன செய்வது? என்றும் மதிப்பு குன்ருது இருக்கும் பொருள் எது?...... கைக்குள்ளே அடகக முடிந்த பொருள் எது? கமுக்கமாக அமுக்க முடிந்த பொருள் எது? அது தங்கம!...அது வைரம்!...

ஆகவே, குவிந்துகிடக்கும் பணத்தைக் கொண்டு, வாங்கு தங்கத்தை...அது என்ன விலையானலும் சரி... சர்வதேச விலை பவுனுக்கு 50, 60 ரூபாயாக இருக்க, அது நம்ம தேசத்தில் 200 ரூபாயாக ஏறி விற்க... என்ன விலையானலும் சரி... வாங்கு தங்கத்தை!...... வாங்கு வைரத்தை!......

தோழர்களே!

இப்படித்தான், ஏழை மக்களைக் கொள்ளையடிச்ச பணத்தைக் கொண்டு, தங்கமும் வைரமும் வாங்கிய வண்ணமிருக்கிருர்கள்.

அதனுல்தான் எங்கு பார்த்தாலும் தங்கக்கடத்தல் நடந்து கொண்டேயிருக்கிறது.

இந்த மாத ஆரம்பத்தில்கூட, மங்களூரிலிருந்து பெங்களூருக்கு ஒரு கருவாட்டு லாரியில் தங்கம் கடத்தியிருக்கிருர்கள. அதை நிறுத்திச் சோதித்ததில், 800 பிஸ்கட் வடிவ தங்கக்கட்டிகள்! ஒவ்வொரு பிஸ்கடடும் 10 தோலா தங்கம்!...ஆக மொத்தம் 8000 தோலா தங்கம...இது ஒரு தகவல்.

தென்ஞற்காடு மாவட்டத்தில் ஒருவர் வீட்டில், மூன்று மாசத்துக்கு முன்னே சோதனைபோட்டபோது, 5 லட்ச ரூபாய் தங்கம பிடிபட்டதாம்! ... இது ஒரு தகவல்.

அதேபோலே. திருச்சியில் ஒரு திருமதி வீட்டில் 12 லட்ச ரூபாய் மதிப்புள்ள தங்க நகைகள் பிடிபட்டதாம்!......இப்படி ஒரு தகவல்.

இது போல நாள்தோறும் தங்கக் கடத்தல் நடந்து கொண்டேதான் இருக்கிறது.

இது எல்லாம் வெளிநாட்டுத் தங்கம. நம்ம நாட்டிலேயே, மைசூர் மாநிலத்தில உள்ள தங்கச் சுரங்கங்களில் வருஷத்துக்கு 4000 கிலோ தங்கம்......அதாவது ரூ. 40 கோடி மதிப்புள்ள தங்கம்...வெட்டபபடுகிறதாம!

இப்போது சிமோகா மாவட்டம் கோனலி தாலுகாவில், புதுச் சுரங்கம குடையப் போகிருர்களாம. குடைவதற்கு ரூ. 15 கோடி செலவு ஆகுமாம்! அதிலே எத்தனை ஆயிரம கிலோ தங்கம கிடைக்குமோ தெரியாது!......இதுவும் ஒரு தகவல.

எப்படியோ, நம்ம நாடு என்னமோ பொன்ஞடு என்ருல் பொன்ஞடுதான்!

நம்ம பெண்ணுக்கு ஒரு 5 பவுன் செயின் செய்து போட்டு, கட்டிக்கொடுகக வக்கில்லாவிட்டாலும், நம்ம நாடு என்னமோ பொன்ஞடு என்ருல் பொன்ஞடுதான், "அதிலே ஒண்ணும் குறைச்சல் இல்லே!

தங்கம் ஏராளமாக வைத்திருக்கும் பட்டாடை மனிதர்கள், அதிலே கொஞ்சம் சாமிக்கு நைவேத்தியம பண்ணுவார்கள் அல்லவா!

ஆம்!

இதோ! சபரிமலை ஐயப்பன் கோவில் கர்ப்பக் கிரகத்துக்கு தங்கக கூரை போடப்போகிருர்களாம்! அதற்கு 5250 தோலா தங்கத்தை உருக்கி உருக்கிப் பூசப்போகிருர்களாம்!

எதற்கய்யா இதெல்லாம் என்று கேட்டால், "தங்கப் பூச்சு இல்லாவிட்டால் சாமி கோபித்துக்கொள்ளும்" என்கிருர்கள்.

குளிர்காலத்திலே குறுகிக் கும்மிப்போய் மண்டி போட்டுக்கொண்டிருக்கும் ஐய்யப்பசாமி இவ்வளவு கேட்டால், கோடை கால சாமி மீனட்சியம்மன் கொஞ்சமா கேட்கும்!

இதோ! மதுரையிலே, மீனட்சியம்மனுக்கு...... 15 லட்சம் ரூபாய்க்கு ஒரு வைரக்கிரீடம் சூட்டப்பட்டது. அதிலே மாணிக்கக் கல்லாம்! மரகதப் பச்சையாம்;... 3350 வைரங்களாம்!......4100 சிவப்புக் கற்களாம்! இதெல்லாம் 3½ கிலோ எடையாம்!

இத்துடன், 7000 கிராம் தங்கத்தில் அம்மனுக்கு கவசமாம! இதையெல்லாம் செய்து முடிக்க 2 வருடம ஆச்சாம்!...

இப்படியெல்லாம் சாமிகளுக்கும் தங்கம் வைரம்!... கறுப்புப பண ஆசாமிகளுக்கும் தங்கம் வைரம்!...

நம்ம ஏழை, நடுத்தர மக்களுக்கு என்ன கிடைத்தது? உள்ள தங்கச் செயினும் தாலிக் குண்டுகளும் விலைவாசி ஏற்றத்துக்கும், கடன் தொல்லைகளுக்கும் ஈடு கொடுக்கமுடியாமல், அடகுக் கடைக்களுக்குள்ளே புகுந்து முழுகிப்போய் விட்டன.

ஆம்!

நம்மநாடு பொன்ஞடுதான்!...ஆனல், நம்ம நாடு இரு வர்க்கங்களாகப் பிளவு பட்டுக் கிடக்கிறதே!

இதில் எந்த வர்க்கத்துக்குப் பொன்ஞடு? எந்த வர்க்கம தங்கக் கட்டிகளை பெட்டிக் கணக்கில் வைத்திருக்கிறதோ, அந்த வர்க்கத்துக்கு இது பொன்ஞடுதான்!

நம்ம வர்க்கத்துக்கு என்ஞடு?......வெறும் மண்ஞடுதான்!

—ஐ. மா. பா.

---

## கோவை பகுதியில்

# 15 ஆயிரம் பேர் பட்டினி அரசு தலையிட வேண்டும்

## தோழர் ஆர். வெங்கிடு அறிக்கை

கோவை, டிச. 13—

கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) கோவை மாவட்டக் கமிட்டி செயலாளர் தோழர் ஆர். வெங்கிடு கீழ்வரும் அறிக்கையினை விடுத்துள்ளார்:—

கோபி தாலுகா குத்தியாலத்தூர் மலைப்பகுதியில் ஆதிவாசிகளும், மலைஜாதி மக்களுமாக சுமார் 15000க்கு மேற்பட்டோர் வாழ்கின்றனர். இம்மக்கள் அந்த மலையை நம்பித்தான் வாழ்கின்றனர். சமீப காலத்தில ஏற்பட்டகடுமையானமழையின் காரணமாக இதர பகுதிகளிலிருந்து அப்பகுதி பூரணமாகதுண்டிக்கட்டுள்ளது. சத்திமங்கலத்தை இணைக்கும் பிரதானமான ரோடுகள் அனைத்தும் மழையினல் அடித்து செல்லப்பட்டு சக்திமங்கலத்துடன் எவ்வித தொடர்புமின்றி அம்மலைப் பகுதி துண்டிக்கப்பட்டுவிட்டது.

### போக்குவரத்து பாதிப்பு

மேற்படி பகுதிமக்களுக்கு தேவையான சகல உணவுப் பொருள்களும், அத்தியாவசிய பண்டங்களும் சத்தியமங்கலத்திலிருந்து தான் செல்ல வேண்டியுள்ளது. இந்நிலையில் சத்தியமங்கலத்திலிருந்து கடப்பூர் செல்லும் பிரதான ரோடும் சுற்றிவளைத்துச் செல்லும் ரோடான கேர்மாளம் வழியில் செல்லும் ரோடும் சமீபத்திய மழையில் பூரணமாக அடித்துச் செல்லப்பட்டு போக்குவரத்து அடியோடு நின்றுவிட்டது. மலைப் பகுதிக்கு எவ்விதசாதனமும்கொண்டு செல்லஎவ்விதமார்க்கமும் இன்று இல்லை.

இதனல் அப்பகுதியில் சுமார் 15000க்கு மேற்பட்ட மக்கள் பெருமபட்டினிக்கு ஆளாக்கப்பட்டுள்ளனர்.

மறுபக்கம் மலையை இணைக்கும் பிரதானமான இந்த இரண்டு சாலைகளும் பூரணமாக நாசமானதுடன் அப்பகுதியில் உள்ள குத்தியாலத்தூர், திங்களூர், குன்றி, மாக்கம் பாளையம், கேர்மாளம் ஆகிய ஐந்து பஞ்சாயத்துக்களுக்கு உட்பட்ட பெரிதும் சிறிதுமான நூற்றுக்கு மேற்பட்ட கிராமங்களை இணைக்கும் பல இணைப்பு சாலைகளும் பூரணமாக நாசமாகி விட்டன.

அடுத்து மேற்படி கிராமங்களில் வசிக்கும் மக்களில் பெரும் பகுதி குடிசைகளில் வாழ்க்கை நடத்தக்கூடிய மக்களதான் பாதிககப்பட்டுள்ளனர். கடுமையான மழையின் காரணமாக பெரும் பகுதி குடிசைகள் அழிந்துவிட்டன. குடியிருக்க வழியில்லாமல் பெரும் அவதிக்கு ஆளாக்கப்பட்டுள்ளனர்.

### அதிகாரிகள் கவனிப்பார்களா

மேற்கண்ட நிலைமைகளைப்பற்றி அரசு அதிகாரிகள் கவனத்திற்குக் கொண்டுவந்து தேவையான நடவடிக்கைகள் உடன் எடுக்க வேண்டுடுமென ஸ்தலத்திலுள்ள எங்கள் கட்சி, விவசாயிகள், சங்கம் ஆகியவற்றின் சார்பில் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கும் தங்களுக்கும் 31—10—72, 25—11—72 ஆகிய தேதிகளில் விண்ணப்பங்கள் அனுப்பப்பட்டுள்ளன. ஆனல்இதுவரை எந்த நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

தற்சமயம் நிலைமை இன்னும் மோசமாய் உள்ளது. சென்ற வாரத்தில் பெய்த மழையின் காரணமாக மிகப்பெரிய பாதிப்புகள் ஏற்பட்டுள்ளது. உண்ண உணவின்றி மக்கள் பெரிய அளவிற்கு பட்டினியால் வாடுகின்றன. கையில் உணவு தானியம் இல்லை. வசதி படைத்த சிலரிடம் தானியம் இருக்கிறது. அவர்கள் அதைப்பதுககி வைத்துக் கொண்டுள்ளனர்.

ஆங்காங்கு பட்டினிச் சாவுகள் ஏற்படக்கூடிய ஆபாயம் முன்வந்து நிற்கின்றது. இப்படிப்பட்ட மோசமான நிலையிலுள்ள மக்களைப் பாதுகாக்க அரசு உடன் தலையிட வேண்டும்.

கீழ்கண்டநடவடிக்கைகளைமேற்கொள்ள வேண்டுமென கோருகிருேம்.

குத்தியாலத்தூர் மலைப் பகுதியிலுள்ள (1) கேர்மாளம். (2) திங்களூர் (3) குத்தியாலததூர், (4) மாக்கம பாளையம், (5) குன்றி ஆகிய பஞ்சாயத்துக்களுக்கு உட்பட்ட முக்கியமான மையங்களில் இருபதிற்கு மேற்பட்ட கிராமங்களில் உடனடியாக கஞ்சித் தொட்டி அமைத்து உணவளிக்க வேண்டும்.

மேற்கண்ட பகுதிகளில் ஆங்காங்கு மலிவுதானிய கடைகளை ஏற்படுத்தி மலிவு விலையில் உணவுப் பொருட்களும், அத்தியாவசிய பண்டங்களும் கிடைக்கவகை செய்யவேண்டும்.

### வேலை வாய்ப்பு அளித்திடுக

சத்தியமங்கலத்திலிருந்து கெம்பநாயக்கன்பாளையம் வழியாக கப்பூர் செல்லும மலைப்பாதையையும்அடுதது கேர்மாளத்திலிருநது குத்தியாலத்தூர் கடம்பூர் வழியாக மாக்கம்பாளையத்தை இணைக்கும் ரோட்டையும், நல்லமுறையில் செப்பனிட்டு போக்குவரத்து மார்க்கத்தை விரைவில் ஏற்படுத்த வேண்டும்.

உள்கிராமங்களில்உள்ள பாதைகள் அழிந்துள்ளதை மீண்டும் செப்பனிட நடவடிக்கை மேற்கொள்ளவேண்டும்.

எவ்வித வேலையும், வருவாயுமில்லாமல் அவதிப்படும் இப்பகுதி மக்களுக்கு வேலை வாய்பளிக்க மேற்கண்ட மராமத்து வேலைகளை அரசு மேற்கொண்டு வேலைவாய்ப்பளிக்க வேண்டும் என்று வற்புறுத்துகிறேன்.

---

டெல்லி பல்கலைக் கழக துணைவேந்தர் அலுவலகம் முன்பு டிசம்பர் 6-ம் தேதியன்று அமைதியாக ஆர்ப்பாட்டம் செய்துகொண்டிருந்த மாணவர்கள் மீது பல்கலைக்கழக காம்பவுண்டிற்குள் அத்துமீறி நுழைந்த போலீசார் அடித்து நொறுக்கியுள்ளனர்.

படத்தில், நடுவிலுள்ள மாஜிஸ்திரேட் கையை வைத்து மறித்துத் தடுத்தும் கேட்காமல்-கீழே விழுந்து கிடக்கும் ஒரு மாணவரை பெரிய, பெரிய தடிக் கம்புகளைக்கொண்டு மிருகத்தனமாகத் தாக்கும் காட்சி. —நன்றி "இந்துஸ்தான் டைம்ஸ்"

---

## தொழிற்பயிற்சிப் போதகர்கள் வேலை நிறுத்தம்!

### கொட்டும் மழையில் மாணவர்கள் ஊர்வலம்!

சென்னை, டிச. 13—

தமிழ்நாடு முழுவதும் உள்ள 1300க்கு மேற்பட்ட தொழிற் பயிற்சிப் போதகர்கள் தகுதிக்கும், உழைப்புக்கும் ஏற்ற ஊதியம் கோரி டிச. 5ம் தேதி முதல் கோரிக்கை நிறைவேறும் வரை உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்.

#### புறக்கணிப்பு!

தமிழ்நாடுஅரசின் இரண்டாவது ஊதியக் குழுவும், ஒரு நபர்க்குழுவும் இப்போதகர்களின் ஊதிய உயர்வுக் கோரிக்கைகளைப் புறக் கணித்துவிட்டன. தேசிய அடிப்படையில் உள்ள கைவினைப் பயிற்சித்திட்டத்தில் தொழில் நுட்பக்கல்வித் தரமுள்ள மாணவர்களை உருவாக்கும் இப்போதகர்களுக்குத் தேசியக்குழுவின் (என். சி. டி. வி. டி) சிபாரிசுப்படியான ஊதிய உயர்வும் அளிக்கப்படவில்லை.

#### கோரிக்கை!

தேசியக்குழு பரிந்துரைத்துள்ள ஊதிய விகிதம் உடனே அமுல்படுத்தப் படவேண்டும். அல்லது—

போதகர்களின் ஊதிய விகிதத்துக்கு இணையான ஊதியம் பெற்றிருந்த டெக்னிகல் கேட்டநிதி ஊழியர்களுக்கு அளிக்கப்பட்ட ஊதிய விகிதமான ரூ. 325—15—550 என்ற ஊதியவிகிதம் போதகர்களுக்கும் அளிக்கப்பட வேண்டும்.

#### அரசின் அலட்சியம்!

மேற்கண்ட கோரிக்கைகளுக்காக 18—9—72 முதல் 23—9—72 முடிய கறுப்புப் பட்டை அணிந்து போதகர்கள் தமிழ்நாடு முழுதும் கோரிக்கைவாரம் கடைப்பிடித்தனர்: 26—9—72 அன்று பெருந்திரள் சிறு விடுப்பு இயக்கம் நடத்தினர். 11—11—72 அன்று கோரிக்கையின் மாநில மாநாடு நடத்தி, ஊர்வலம் நடத்தினர். எனினும் கோரிக்கையின் நியாயததை உணர தமிழ்நாடு அரசுமறுக்கிறது. எனவே 5—12—72 முதல் டூல்டௌன், பென்டௌன் சாங்டௌன் என்னும் உள்ளிருப்பு வேலைநிறுதத்தைத் தொடங்கியுள்ளனர்.

நிர்வாகம் எச்சரிக்கையும், மெமோக்களும் அளித்து, போதகர்களை மிரட்டும் வேலையிலும். பிளவு படுத்தும் வேலையிலும் ஈடுபட்டுள்ளது. இதற்கு மாருக வேலைநிறுத்தம் தமிழ்நாடு முழுதும் முழு வெற்றிருடன் நடந்து வருகிறது.

#### மாணவர்கள் ஆதரவு!

இக்கோரிக்கைகளுக்கு ஆதரவாக சென்னையில் மாணவர்கள் வேலைநிறுத்தம் செய்து வருகின்றனர். கொட்டும் மழையில் ஏராளமான மாணவர்கள் ஊர்வலமாகச் சென்று வேலை வாய்ப்பு மற்றும் தொழிற் பயிற்சித்துறை இயக்குனரிடம் மகஜர் அளிததனர்.

---

## வட ஆற்காடு தோல் பதனிடும் தொழிலாளர் வெற்றி

வாணியம்பாடி, டிச. 14—

வட ஆற்காடு மாவட்டம் தவிர மீதமுள்ள மாவட்டங்களின்தோல் பதனிடும் முதலாளிகளுக்கும்,தொழிற்சங்கங்களுக்கும் இடையில் 22-11-72 அன்று சென்னையில் லேபர் கமிஷன் முன்பு ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டது. அதன்படி தோல் பதனிடும் தொழிலாளர்களுக்கு 1-10-72 முதல் நாளொன்றுக்கு 1 ரூபாய் வீதம் பஞ்சப்படி கொடுப்பதென்று ஒப்புக் கொள்ளப்பட்டது.

வட ஆற்காடு மாவட்டத்தில் சி. ஐ டி. யூ வுடன் இணைந்துள்ள சங்கமாகிய வடஆற்காடுமாவட்டதோல் பதனிடும் தொழிலாளர்கள் அசோஷியேஷன் சம்பள உயர்வுக்காக கிளர்ச்சிப் பிரச்சாரம் நடத்தி வந்தது. இதன் நிர்பந்தத்தால் ஆதிமூலம் சங்கமும் இந்தக் கோரிக்கையை வலியுறுதத வேண்டியதாயிற்று.

4—11—72 அன்று வேலூர் லேபர் ஆபீசர் முன்னிலையில் நடைபெற்ற ஒப்பந்தப்படி வட ஆற்காடு மாவட்ட தோல் பதனிடும் தொழிலாளர்களுக்கு 1-10-72 முதல் நாளொன்றுக்கு 1-05 பைசா பஞ்சப்படி தரப்படும்.

—தொழிற் சங்க நிருபர்

---

## குமரி மாவட்டத்தில் பொதுக்கூட்டம்

தக்கலை, டிச. 14—

29-11-72ல் இரணியல் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பொதுக்கூட்டம் தோழர் சொ.ஜனர்த்தனன் தலைமையில்நடைபெற்றது. தோழர்கள் கே.முருகேசன் என்.பத்மநாபன், என்.அச்சுதன், பி திவாகரன் ஆகியோர் பேசினர். வேலப்பன் குழுவினரின் இன்னிசை நடைபெற்றது.

9—12—72-ல் குலசேகரத்தில் தோழர் வி. முத்துசாமி தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர்கள் ஜே. ஹேமச்சத்திரன், என். அச்சுதன், தோழர் ஆர். உமாநாத் சி. ஐ. டி. யூ. மாநில செயலாளர் ஆகியோர்பேசினர்.

10-12-72ல் மார்த்தாண்டம் காந்தி திடலில் தோழர் டி. பாக்கியதாஸ், தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் தோழர் ஆர். உமாநாத் இன்றைய அரசியல் நிலை குறித்து பேசினர்-

---

## தொழிற்சங்க ஊழியரை குத்திக் கொல்ல முயற்சி

### (ஒரு திருத்தம்)

"தொழிற்சங்க ஊழியரை குத்திக் கொல்ல முயற்சி" என்ற தலைப்பில் "தீக்கதிர்" 19—11—72 இதழின் 4-ம் பக்கத்தில் வெளியானசெய்தியில் 3-வது, 4-வது பாராக்களில் வி. கோபால கிருஷ்ணன் மெக்கானிக் என்று வருவதற்குப் பதில் வி. கோபால கிருஷ்ணனின் மைத்துனர் கிருஷ்ணன் என்று கீழ்வருமாறு திருத்தி வாசிக்கவும்:—

"இப்போது பாபநாசத்தில் உள்ள தோழர் கே. பி, ராமசாமியை நவம்பர் 4-ம் தேதி மாலை சுமார் 4மணிக்கு முன்னேற்ற சங்கத்தின் வி. கோபாலகிருஷ்ணனின் (மெக்கானிக்) மைத்துனர் கிருஷ்ணன் என்பவர் கத்தியால் குத்தி கொலை செய்யத் தாக்கினுராம். தோழர் ராமசாமி மறித்து கூக்குரல் எழுப்பி இதர சகோதரத் தொழிலாளர்கள் உதவியுடன் கொலை செய்ய முயன்ற கிருஷ்ணனை காவல் நிலையத்தில் ஒப்படைத்தனர். அதற்கு மேல், உடனே மின்வாரிய கோட்டப் பொறியாளரிடம் புகார் கொடுக்கப் பட்டது. மேற்படி கிருஷ்ணன் மீதும், அவரைத் தூண்டிய முன்னேற்றச் சங்க நிர்வாகிகள் மீதும் கடுமையான நடவடிக்கை மேற்கொள்ள வேண்டுமென்றும், எக்காரணத்தைக் கொண்டும் கிருஷ்ணனை பாபநாசத்தில் தங்க வைக்கக் கூடாதென்றும் எடுத்துக்கூறப்பட்டது. திருநெல்வேலி மின் உற்பத்தித் துறை மேற்பார்வையாளா பாபநாசம் வந்து விசாரணை நடத்திச் சென்ருர். ஆனல் எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை என்பது மட்டுமல்ல, மாருக கொலை செய்ய முயன்ற கிருஷ்ணன் இரண்டே நாட்களில் விடுதலை செய்யப்பட்டுள்ளார்.

### இயக்கம் நடத்துவீர்

பாபநாசம் கேம்பில் குடியிருப்பில் இருந்துகொண்டு இதர மின்சாரத் தொழிலாளர்களை அச்சுறுத்தியும் கொலை செய்யவும் நடவடிக்கை மேற்கொண்டுள்ளார். கொலை முயற்சி மேற்கொண்டுள்ளவர் மீதும தூண்டியவர்கள் மீதும், கடுமையான நடவடிக்கை மேற்கொள்ளவும், அதுவரை கிருஷ்ணனை உடனே பாபநாசம கேம்பிலிருந்து வெளியேற்றிவைகக வேண்டுமென்றும், மத்திய அமைப்பு தொழிற் சங்கங்களும், இதர சகோதர சங்கங்களும இயக்கம் நடத்தவேண்டுமென கேட்டுக்கொண்டுள்ளன"

(தவறுக்கு வருந்துகிருேம)

— ஆசிரியர்

---

## தி. மு. க. அடக்குமுறை எதிர்ப்புக் கூட்டங்கள்

திருமங்கலம்; டிச. 4—

திருமங்கலம் தாலுகாவில் தி. மு. க. அடக்குமுறை எதிர்ப்பு பொதுக்கூட்டங்கள் நடைபெற்றன.

### சாப்டூர்

திருமங்கலம் தாலுகா சாப்டூரில் நவ 27-ம தேதியன்று தோழர் ப. மாரியப்பன் தலைமையில் பொதுக் கூட்டம் தடைபெற்றது. தோழர்கள் நன்மாறன். மு. கணபதி; எஸ். நாகையன் ஆகியோர் தி. மு. க. அரசின் அடக்குமுறைக் கொள்கைகளைக் கண்டித்துப் பேசினர்.

### டி. கல்லுப்பட்டி

டி. கல்லுப்பட்டியில் நவம்பர் 28-ம் தேதியன்று தி. மு. க. அடக்குமுறையைக் கண்டித்து பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு கே. அய்யாவு தலைமை வகித்தார். மற்றும் தோழர்கள் நன்மாறன், மு. கணபதி, ஐ. முனியாண்டி, ஆகியோர் பேசினர். தோழர் வி. ராமமூர்த்தி இயக்கப்பாடல்களை தனது இனிய குரலில் பாடினர்.

### திருமங்கலம்

திருமங்கலத்தில் நவம்பர் 30ம் தேதியன்று மார்க்சிஸ்ட கட்சிப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர் எல். முத்துமணி தலைமை வகித்தார். தோழர்கள், என். சங்கரய்யா, உ. ச. உலகப்பா, மூ. கணபதி, ஐ. முணியாண்டி, பி. சந்தானம், எம். பாலுச்சாமி, ஆகியோர் தி. மு. க. அரசின் அடக்கு முறையைக் வன்மையாகக கண்டித்துப் பேசினர்கள்.

---

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி(மார்க்சிஸ்ட்)தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில் (13, முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா,